நெல்லையைச் சேர்ந்த ஜெபமணி என்ற கிறித்தவ ஊழியம் செய்யும் ஒருவர் மெய் வழி
என்ற பெயரில் 1980 களில் நடத்தி வந்தார். அதில் இஸ்லாத்தைக் கொச் சைப்படுத்தி
எழுதுவதே இவரது வாடிக்கையாக இருந்தது. ஆனால் இவரது எழுத்துக்களி ல் எந்த விதமான அறிவுப்பூர்வமான வாதமும் இருக்காது.

இந்த நிலையில் இடையிடையே நூல் வடிவிலும் இஸ்லாத்தை ஏசி நூல்களை வெளியிடுவார். அப்படி அவர் வெளியிட்ட நூல்களில் ஒன்று தான் கஅபா நிலைக்குமா என்ற நூல்.

1989 ஆம் ஆண்டு வெளியிட்ட இந்நூல் குறித்து பல சகோதரர்கள் எனது கவனத்துக்குக் கொண்டு வந்த போது அவரது அந்த நூலுக்கு மறுப்பாக கப்சா நிலைக்குமா என்ற நூலை வெளியிட்டோம். இதைக் கொள்கைச் சகோதரர்களின் பொருளுதவியுடன் இலவசமாக விநியோகம் செய்தோம்.

பகிரங்க விவாதத்துக்கும் அவரை நாம் அழைத்தோம். இதுவே அவருடன் நடத்திய விவாதத்துக்குக் காரணமாக இருந்தது.

அப்போதெல்லாம் பைபிள் குறித்து எனக்கு பெரிய அளவில் ஞானம் கிடையாது. இந்த விவாதத்துக்காக நான் பைபிளை பத்து தடவை படித்ததால் தான் பைபிள் குறித்து ஓரளவு அறிய முடிந்தது. அதற்காக எடுக்கப்பட்ட குறிப்புக்களை பயன்படுத்தித் தான் இயேசு இறை மகனா? இது தான் பைபிள், பைபிளில் நபிகள் நாயகம், இயேசு சிலுவையில் அறையப்படவில்லை ஆகிய நான்கு நூல்களை நான் எழுதினேன்.

பைபிளுக்குள் என்னை இழுத்து விட்ட ஜெபமனிக்கு நான் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளேன்.

நேயர்களுக்கு பயன்படட்டும் என்று கருதி கப்சா நிலைக்குமா என்ற அந்த நூல் இங்கே வெளியிடப்படுகிறது.

## கப்சா நிலைக்குமா?

(காபா நிலைக்குமா என்ற நூலுக்கு மறுப்பு)

### முன்னுரை:

சமீப காலமாக தமிழகத்தில் நடந்த மத மோதல்களையும் சில இந்து மத வெறி இயக்கங்களின் அவதூறு பேச்சுகளையும் காரணமாக்கி நமக்கு இந்துக்களே விரோதிகள் என்று நண்பர்கள் கூறும் போதெல்லாம் இல்லை இல்லவே இல்லை இம்மோதல்கள் அரசியல் ரீதியானவை ஆனால் தத்துவ ரீதியிலும் சரித்திர ரீதியிலும் உலகளாவிய நிலையில் நமக்கு கிறிஸ்தவர்களே விரோதிகள் என்று நான் சொல்வது வழக்கம்.

இதை நிரூபிக்கும் வண்ணமாக அடிக்கடி சில வெயல்கள் நடந்து வருகின்றன. தமிழகத்தில் கிறிஸ்துவ பிரிவில் ஒரு சாராராகிய கத்தோலிக்கர்கள் முஸ்லிம்களிடம் ஊடுருவவோ குழப்பம் ஏற்படுத்தவோ முயல்வதில்லை. அவர்களைக் குறை கூறித் திரியும் மற்றொரு பிரிவினரான புரோடஸ்டண்டுகள் என்று தம்மைக் கூறிக் கொள்ளும் கிறிஸ்தவர்களில் ஒரு கூட்டம் நாமெல்லாம் வேதக்காரர்கள் சகோதரர்கள் என்று கையைக் குலுக்குவது போல் நடித்து காலை வாரி விடுவதற்காக இயங்குவதைப் பார்த்துக் கொண்டு தான் இருக்கிறோம்.

ஆம் இவர்கள் ஈமான் யவ்முல்கியாமத் கஃபா என்றெல்லாம் அரபி எழுத்தில் பெரிய தலைப்பிட்டு தங்கள் பிரசுரங்களை முஸ்லிம்கள் வாழும் பகுதிகளில் விஷமத்தனமாய் வினியோகிப்பார்கள். முஸ்லிம்களும் அரபி எழுத்தையும் ஈமான் கஅபா போன்ற தலைப்புகளையும் பார்த்து வாங்கிப் படிப்பார்கள். அந்தப் பிரசுரங்களில் கர்த்தராகிய தேவனை விசுவாசிக்கும் படியும் இயேசுவே அந்தத் தேவன் என்பதும் காணப்படும். முகவரி பகுதியில் தபால் பட்டி எண் கொடுக்கப்பட்டு வேலூர் என்று அச்சிடப்பட்டிருக்கும்.

இது மட்டுமின்றி அக்பர் ஹக், மஜீது ஆபேல் என்று முஸ்லிம் பெயர்களைப் பெரிதாகப் போட்டு இவர்கள் நற்செய்தி அளிப்பதாக முஸ்லிம்கள் வாழும் பகுதிகளில் ஒட்டி குழப்பம் ஏற்படுத்துவது இவர்களின் வழக்கம்.

அவ்வகையில் மற்றொரு மற்றோரு வழிகேடனின் விஷமத்தனம் தான் கஅபா நிலைக்குமா என்ற புத்தகம்.

அட்டையில் பெரிதாக ஈஸா அவர்கள் வானத்திலிருந்து இறங்கி தொழ வைப்பார்கள்

-ஹதீஸ் முஸ் லிம் 795, 782 என்றும்

வானத்திலிருந்து கல் ஒன்று கஅபாவின் மேல் விழுந்து கஅபா சிதறுவது போல் படத்தைப் போட்டு கஅபா என்ற பெரிய எழுத்திலும் நிலைக்குமா என்ற சிறிய எழுத்திலும் லாயிலாஹ இல்லல்லாஹி என்று வாசகமும் சேர்த்து வெளியிட்டுள்ளனர்.

இஸ்லாமியர்கள் மத்தியில் ஊழியம் செய்யும் முறைகளைப் பாடமாக வரை படங்களுடன் கற்றுத் தர வேண்டுமானால் இந்நூலாசிரியரை அணுகுங்கள் என்ற புத்தகத்தின் கடைசி பக்கத்திலிருந்து இவர்களின் நோக்கங்களை அனைவரும் அறியலாம்.

இப்புத்தகத்தை எழுதிய மெய்வழி என்ற கிறிஸ்துவ மாதப் பத்திரிக்கையின் ஆசிரியரபன எம் டி ஜெபமணி எனபவர் தனது உரையில் ஜனாப் ஜின்னா பாரத நாட்டை பங்கிட்டமையால் முஸ்லிம் மக்களை வெறுத்தேன் என்கிறார்.

(பக்கம் 5)

இதில் இருந்து அவரது அறிவின் விசாலத்தை அனைவரும் அறிந்து கொள்ள முடிகிறது முஸ்லிம்களை வெறுப்பதற்கு கொள்கைகளோ தத்துவங்களோ காரணங்கள் அல்லவாம். மாறாக அரசியல் ரீதியாக ஜின்னா பாரத நாட்டைப் பங்கிட்டதால் முஸ்லிம்களை வெறுத்தாராம்.

பாரத நாட்டைப் பங்கிட்டமைக்காக அவர் வெறுப்பது என்றால் பாரத நாட்டை வெள்ளை கிறிஸ்துவ அரசாங்கம் பங்கிட்டுக் கொடுத்ததே அப்படியானால் கிறிஸ்தவர்களையும் அல்லவா வெறுக்க வேண்டும். அதுவும் பாரதத்துக்கு சுதந்திரம் வழங்கும் முன் பாக்கிஸ்தானுக்குச் சுதந்திரம் வழங்கி பாரதத்தின் முகத்தில் கரியைப் பூசிய கிறிஸ்தவர்களை அல்லவா முதலில் வெறுக்க வேண்டும்.

பாரத நாட்டைப் பங்கிட்டமைக்காக பங்கிட்டவர்களை வெறுக்கலாம். அதில் ச்ம்பந்தப்பட்டவர்களை வெறுக்கலாம். பங்கிடப்பட்ட போதும் இந்தியாவை விட்டு போக மாட்டோம் என்று கூறி இன்றளவும் இந்தியாவிலேயே முஸ்லிம்கள் வாழ்கிறார்களே! பாகிஸ்தானுடன் சம்பந்தமின்றி உலகத்தின் பல பகுதிகளிலும் கோடானு கோடி முஸ்லிம்கள் வாழ்கிறார்களே அவர்களையும் வெறுக்க வேண்டுமா?

யாரோ செய்த காரியத்துக்காக முஸ்லிம் சமுதாயத்தையே வெறுத்தேன் என்று கூறுபவன் கொஞ்சமாவது அறிவுடையவனாக இருக்க முடியுமா? இப்படிப்பட்ட அறை வேக்காடு தான் தக்க காரணம் எதுவும் இன்றி முஸ்லிம்களின் பால் வெறுப்பை வளர்த்துக் கெண்டு இந்தப் புத்தகத்தை எழுதியது என்பதில் இருந்தே இதன் தரத்தை உணரலாம் . இப்புத்தகத்தின் விமர்சனமே இக்கட்டுரை.

## கப்ஸா நிலைக்குமா

நீங்கள் கெட்டிக்காரன் என்று நிரூபிக்கப் பல காரியங்கள் செய்ய வேண்டி இருக்கும். ஆனால் முட்டாள் என்று நிரூபிக்க ஒன்றே போதும் என்றான் டான் ஹெரால்ட என்ற அறிஞன். அந்த ஒரே ஒரு காரியத்தைச் செய்து நிரூபித்துக் காட்டியிருக்கிறார் ஜெபமனி.

விவாதங்கள் அறிவின் அடிப்படையில் ஆதாரங்களின் துணையோடு அமைய வேண்டுமே தவிர மூடத்தனத்தில் எழக் கூடாது. ஒரு விஷயத்தைக் காய்த்தல் உவத்தலின்றி ஆராய வேண்டும். அஃதின்றி தானே புத்திசாலி என்ற மமதையில் தனக்குத் தோன்றியவாறெல்லாம் பேசுவது முட்டாள் என்று தன்னைத் தானே நிருபித்துக் கொள்ளப் போதுமானதமாகும்

பூமி சூரியனைச் சுற்றுகிறது என்ற உண்மையை ஆராய்ந்து சொன்னதற்காக கலிலியோவைக் குற்றவாளியாக்கிச் சிறையிலிட்ட மதத்தின் நூல் தொகுப்புக்களை வேதம் என நம்புபவர் இந்நூலில் பல இடங்களில் முஸ்லிம்களை முட்டாள்கள் எனக் கூறுவது அண்ணாந்து கொண்டு எச்சில் உமிழ்வது போல் உள்ளது.

ஆகாத முகத்தின் மேல் ஆத்திரப்பட்டு கையில் இருக்கும் கண்ணடியை உடைத்த மாதிரி கலகலத்துப் போய்விட்ட கிறிஸ்தவ மத நம்பிக்கைகளை (உதாரணம் மேற்கத்திய நாடுகள்) காப்பாற்றிக் கொள்ளத் தெரியாமல் இயலாமல் முஸ்லிம்களை வம்புக்கு இழுக்கிறார்கள்.

மேனாட்டுக் கிறிஸ்தவர்கள் பாரம்பரியமாக ஊட்டப்பட்ட நம்பிக்கைகளை மறு பரிசீலனை செய்து கருத்துக்களை துணிவாக வெளியிடத் துவங்கி விட்டனர்.

உதாரணமாக 1957ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் எட்டாம் தேதியென்று வெளியிடப்பட்ட அவேக் என்ற இதழில் பைபிளில் ஐம்பாதாயிரம் பிழைகள் இருப்பதாக ஒரு கட்டுரை வெளியிடப்பட்டது.

1984ம் ஆண்டு ஜுன் மாதம் 25ஆம் தேதி வெளியிடப்பட்ட உஹண்ப்ஹ் ய்ங்ஜ்ள் இதழில் ள்ட்ர்ஸ்ந் ள்ன்ழ்ஸ்ங்ஹ் ர்ச் ஆய்ஞ்ப்ண்ஞ்ஹய் க்ஷண்ள்ட்ர்ல்ள் என்ற

தலைப்பில் ஒரு செய்தி வெளியிடப்பட்டது. அதில் கிறிஸ்தவர்கள் இயேசுவின் தெய்வீகத் தன்மையும் மறு உயிர்த்தலையும் அவரால் நிகழ்த்தப்பட்ட அற்புதங்களையும் பைபிளில் கூறப்பட்டவாறு நம்பவில்லை என்ற தகவல் தரப்பட்டது.

கிறிஸ்துவ மார்க்கம் புராணக் கதைகளின் நகல் என்றும் இயேசு நாதர் ஹோமரின் காப்பியத்தில் வரும் கடவுளர்கள் போன்று கற்பனைக் கடவுள் என்றும் மேல்நாட்டுக் கிறிஸ்துவ சமூகத்தினர் விமர்சிக்கின்றனர்.

பசித்தவன் எதையும் தின்பான். பகைத்தவன் எதையும் சொல்வான் என்பது போல பக்கத்துக்குப் பக்கம் இந்நூலில் அபத்தங்களும், அவதூறுகளுமே மிகைத்திருக்கின்றன.

குத்தினது சின்ன முள்ளாக இருந்தாலும் பிடுங்கித் தான் ஆக வேண்டும் என்பதற்காக இந்நூலை விமர்சிக்கின்றோம். முஸ்லிம்கள் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும் என்பதையும் உணர்த்தும் கடமை நமக்கு இருக்கிறது.

விமர்சனம் -1

சத்தியத்தை உண்மைப்படுத்தி வருவதாக சொல்லி க் கொள்ளும் மதம் ஒன்று அரபு நாட்டில் முகமது என்பவரால் உண்டாக்கப்பட்டது. இம்மதம் குறித்தே நாம் தெளிவடையப் போகிறோம் என்கிறார் ஜெபமணி (பக்கம் 22)

பதில் -1

இஸ்லாத்தைப் பற்றி எவர் வேண்டுமானாலும் விமர்சிப்பதில் நமக்கு ஆட்சேபனை இல்லை. அனைத்துக்கும் இஸ்லாம் சரியான பதிலைத் தர தயாராகவே இருக்கிறது. எனினும் ஒரு மதம் குறித்து தெளிவடையப் போவதாகச் சொல்லும் ஜெபமணிக்கு நிச்சயமா அந்த அறிவுத் தகுதி அறவே இல்லை. ஏனெனில் ஒரு மதம் குறித்து தெளிவடைவது என்றால் அம்மதத்தைப் பற்றி அதன் கொள்கைகள் கோட்பாடுகள் பற்றித் தெரிந்திருக்க வேண்டும். இந்த விஷயத்தில் ஜெபமணி ஒரு ஞான சூன்யம் என்பதில் சந்தேகம் ஏதுமில்லை.

முகமது (ஸல்) அவர்கள் ஒரு மதத்தைப் புதியதாக உருவாக்கவில்லை. அப்படி அவர்களும் சொல்லவில்லை. அவர்கலைப் பின்பற்றுபவரும் சொல்லவில்லை . இஸ்லாத்தின் ஸ்தாபகர் என்று முஹம்மது நபி தம்மைப் பற்றி பறை சாற்றவில்லை . முதல் மனிதர் ஆதம் ஜெபமணி பாஷையில் ஆதாம் தோன்றிய போது இஸ்லாமும் தோன்றி விட்டது. வணக்கத்திற்குரியவன் ஏக இறைவனை மட்டும் ஏற்று மற்ற அனைவரும் அவனது அடிமைகள் என நம்புவது தான் இஸ்லாம்

ஆதாம் முதல் ஆப்ரஹாம், மோஸே, ஈஸாக், இயேசு என்றெல்லாம் ஜெபமனியால் கூறப்படும் அனைவரும் இந்தக் கொள்கையைத் தான் போதித்தார்கள். தங்களை வணங்குமாறு அவர்கள் போதிக்கவில்லை. அவர்களையே வணக்கத்துக்குரியவர்களாக கடவுளின் குமாரர்களாக மக்கள் நம்பியதைத் தான் முஹம்மது (ஸல்) கண்டித்தார்கள். ஆதாமும், நோவாவும், ஆப்ரஹாமும், ஏசுவும் எதைச் சொன்னார்களோ அந்தக் கொள்கையைத் தான் முஹம்மது நபியும் சொன்னார்கள்.

முஹம்மது புதிய மதமொன்றை உருவாக்கினார் என்று கூறுவதே இஸ்லாம் பற்றி ஜெபமணிக்கு எதுவும் தெரியாது என்பதற்குச் சான்று.

இஸ்லாம் பற்றித் தெளிவடையப் போகிறோம் என்று கூறும் இவரது அறிவு தீட்சண்யத்தை அறிந்திட அவர் கையாண்டுள்ள சில வாசகங்களும் துணை செய்கின்றன. நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் ஆரம்பத்தில் நபித்துவ அடையாளத்தைப் பற்றி பேசிய வரக்கா பின் நவ்பல் என்பாரின் பெயரை இவர் தனது நூல் நெடுகிலும் பயன்படுத்தியுள்ள விதம் நகைப்பிற்கிடமானது.

வரக்கா என்பது அவரது பெயர். ஆனால் ஜெமணியோ அவரது பெயர் வரக்காபின் (வரக்கா மகன்) என்று புரிந்து கொன்டு தனது நூல் நெடுகிலும் வர்காபினை ,வர்காபினிடம், வர்காபினுக்கு என்றெல்லாம் எழுதுகிறார்.

இதே போல் அவர் எழுதிய சில சொற்கள் குர்ரான் அவ்லியாக்கள் மெஸிக் காபா ருஹ்மின் கொர்பான் நிஜ்ஜாத் இப்படிப் பல.

தமிழகத்தில் பிரபலமான முஸ்லிம் பெயர்களைக் கூட இவர் அறிந்து வைத்திருக்கவில்லை. ஸமாது (அப்துஸ் ஸமதைச் சொல்கிறாராம்) உலாமா என்றெல்லாம் எழுதுகிறார்.

இஸ்லாம் பற்றி தெளிவடையப் போகிறவரின் தரம் இந்த லட்சணத்தில் இருக்கிறது. இவர் பயன்படுத்திய பல வார்த்தைகள் முஸ்லிம்களுக்கும் புரியாது கிறிஸ்தவர்களுக்கும் புரியாது. இவர் தான் வரைபடத்துடன் முஸ்லிம்களிடம் பிரச்சாரம் செய்யும் முறையைக் கற்றுத் தருபவராம்.

இன்னும் கேளுங்கள்.

விமர்சனம் -2

முஸ்லிம்கள் தேவனை அல்லாஹ் என்று அழைக்கிறார்கள். அதே வேளை மானிடரில் சிறப்பானவரையும் அல்லாஹ் என்றே அழைக்கிறார்கள். நோவாவை சாதிக் அல்லாஹ் என்றும் இயேசுவை கலாமத்துல்லாஹ் என்றும் கிறிஸ்துவை முகீமின் அல்லாஹ் என்றும் இவர்களில் பரிசுத்த ஆவியானவராகிய ருஹீமின் அல்லாஹ்வை அறியக் கூடாதவர் என்று நம்புகின்றனர். குர்ஆன் 17;85 இங்கே முஸ்லிம்கள் அல்லாஹ் என்று குறிப்பட்டுக் கூறுவது தேவ மக்களையே என்கிறார் ஜெபமணி.

(பக்கம் 39)

பதில் - 2

நாம் நமது வாழ் நாளிலேயே இது போன்ற மூடரைக் கண்டதே இல்லை. இந்த முட்டாள் தனத்துக்கு எல்லாம் பதில் சொல்ல வேண்டியிருக்ககிறதே என்று வேதனையுடன் தான் ஜெபமணிக்குப் பதில் அளித்துக் கொண்டிருக்கிறோம்.

முஸ்லிம்கள் தேவனைத் தவிர வேறு எவரையும் அல்லாஹ் என்று ஒருக்காலும் கூற மாட்டார்கள் என்பது சாதாரண நிலையில் உள்ள மாற்று மதத்தவர்களுக்கும் தெரியும். அல்லாஹ் என்று மானிடரைக் கூறுவது ஒரு புறமிருக்கட்டும் அல்லாஹ்வின் பண்புகளைக் கூட அல்லாஹ்விற்கு இருப்பதைப் போல் மற்றவர்களுக்கு இருக்காது என்று உறுதியாக நம்புவதே இஸ்லாம். மானிடர்களில் சிறப்பானவர்களை அல்லாஹ் என்று கூறுகிறோமாம். ஜெபமணி கூறுகிறார்.

அவர் எடுத்துக் காட்டிய சில சொற்றொடர்களில் அல்லாஹ் என்ற வார்த்தை இணைந்துள்ளது அல்லவா? அதனால் அவர் மானிடர்களையே அல்லாஹ் என்று முஸ்லிம்கள் கூறுவதாகத் தெளிவடைந்திருக்கிறார்.

கலீலுல்லாஹ் என்று ஆப்ரஹாமைக் கூறுகிறோம். உண்மை தான். அரபு மொழியில் அமைந்த அந்த சொற்றொடருக்கு என்ன பொருள்?

அல்லாஹ்வின் நண்பர் என்று பொருள்.

அதாவது ஆப்ரஹாம் அல்லாஹ்வுக்கு நண்பராகத் திகழ்ந்தார் என்கிறோம். (அதாவது ஆப்ரஹாம் வேறு அல்லாஹ் வேறு) மோஸேயை கலீமுல்லாஹ் என்று நாம் சொல்வது உண்மையே. அதன் பொருள் அல்லாஹ்வுடன் உரையாடியவர் என்பதாகும்.

நோவாவை சாதிகுல்லாஹ் என்கிறோம்.

அல்லாஹ்விடம் உண்மையாளராக நடந்து கொண்டார் என்பது அதன் பொருள்.

இயேசுவை கலிமத்துல்லாஹ் என்றும் ரூஹீம் மினல்லாஹ் என்றும் நாம் கூறுவது உண்மையே.

அதன் பொருள் என்ன? அல்லாஹ்வின் வாக்கு அல்லாஹ் அருளிய ஆவி என்பது தானே முறையே அந்த சொற்றொடர்களின் பொருள்.

அரபு பொழி தெரிந்தவர்களிடம் இந்த வார்த்தைக்கு என்ன பொருள் என்று கேட்டு தெளிவடைய முடியாமல் இப்படி உளறிக் கொட்டியிருக்கிறார்.

ஜெபமணியை அதுவுல்லாஹ் என்போம். இதன் பொருள் அல்லாஹ்வின் எதிரி என்பது.

இவ்வாறு அவரிடம் நாம் கூறும் போது தன்னையும் முஸ்லிம்கள் அல்லாஹ் என்று கூறுகிறார்கள் என்று அடுத்த பதிப்பில் சேர்த்துக் கொள்வார் போலும். இந்த வார்த்தையிலும் அல்லாஹ என்று இடம் பெற்றுள்ளதல்லவா?

இதை ஜெபமணிக்குப் புரியும் படியாக (அதாவது புரியக்கூடிய வகையில் அவருக்கு தலையில் சரக்கு இருக்குமானால்) தமிழ் இலக்கண விதியைக் கூறி விளக்கலாம்.

ஒருவனுக்கு சொந்தமான ஒரு பொருளை அல்லது அவனுடன் சம்மந்தப்பட்ட ஒரு பொருளைப் பற்றிக் கூறும் போது ஆறாம் வேற்றுமை உருபான அது என்ற உருபு பயன்படுத்தப்படும். அது அல்லது உடைய என்ற வார்த்தை வெளிப்டையாக வந்து ஒருவனுக்குரியதைச் சுட்டும். அவ்வுருபு சில வேளை வெளிப்படையாக வராமலும் இருக்கும்.

உதாரணமாக ஒரு நாய் இருக்கிறது என்றால் இது ஜெபமணியுடைய நாய் என்றும் ஜெபமணியது நாய் என்றும் கூறலாம். அதே மாதிரி ஜெபமணி நாய் என்றும் உருபு சேர்க்காமலும் கூறலாம்.

இது போன்ற அரபு பொழியில் கூறும் போது அதன் இலக்கன அமைப்புப்படி உருபு எதுவுமின்றி இரண்டு தனித்தனி வார்த்தைகள் இணையும் போது உருபு மறைந்து உரிமைப் பொருளை உணர்த்தி நிற்கும். இந்த இணைப்புக்கு அரபு இலக்கணம் இழாஃபத் என்று கூறும்.

இந்த இலக்கண விதியில் அமைந்த இணைப்புச் சொற்களே ஜெபமணி எடுத்துக் காட்டிய சொற்கள்.

ஆறாம் வேற்றுமையாகப் பயன்படுத்தப்பட்ட அந்த சொற்களிலிருந்து மானிடரில் சிறந்தவர்களை முஸ்லிம்கள் அல்லாஹ் என்று கூறுவதாக தெளிவடைந்துள்ள ஜெபமணியிடம் ஜெபமணி நாய் என்று கூறினால் தன்னைத் தான் நாய் என்று கூறுவதாக எடுத்துக் கொள்வார் போலும்.

இப்படியெல்லாம் உளறிவிட்டு குர்ஆனின் 17:85 வசனம் இங்கே முஸ்லிம்கள் அல்லாஹ் என்று குறிப்பிட்டுக் கூறுவது தேவ மக்களையே என்றும் முன்னர் சொன்ன பாராவை முடித்திருக்கிறார்.

குர்ஆனின் ஏதோ ஒரு எண்ணைக் குறிப்பிட்டவுடன் முஸ்லிம்கள் அப்படியே நம்பிவிடுவார்கள் என்பது தான் முஸ்லிம்களிடம் பிரச்சாரம் செய்வதற்கு இவர்களுக்கு அளிக்கப்பட்ட பால பாடம். அந்த வசனத்திற்கும் எடுத்து வைக்கும் வாதங்களுக்கும் சம்பந்தமிருக்க வேண்டுமென்பதில்லை. அந்த பால பாடத்தையே அட்சரம் பிசகாமல் அப்படியே நடைமுறைப்படுத்துகிறார் ஜெபமணி.

அல்குர்ஆன் 17:85 வசனம் தேவ மக்களை அல்லாஹ் என்றெல்லாம் கூறவில்லை. தேவனுக்கு மக்களில்லை என்பதை அல்குர்ஆனின் பல வசனங்கள் தெளிவாகச் சொல்கின்றன.

(ஜெபமணி போன்ற) வேதக்காரர் சிலர் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் வந்து உயிர் என்றால் என்ன? அது எப்படி இருக்கும் என்பது போன்ற கேள்விகளைக் கேட்டனர். அவர்களுக்கு விளக்கமாகவே 17:85 வசனம் அருளப்பட்டது.

(நபியே) உம்மிடம் ரூஹைப் பற்றிக் கேட்கின்றனர் அது தனது இறைவனின் கட்டளையிலி ருந்தே உருவானது. நீங்கள் குறைந்த அளவே அறிவு கொடுக்கப்பட்டுள்ளீர்கள் என்று கூறுவீராக.

இதுதான் 17:85 வசனம்

இதற்கும் மானிடரில் சிறந்தவரை அல்லாஹ் என்று கூறுவதற்கும் ஏதாவது சம்பந்தம் உண்டா? இப்படிப்பட்ட மோசடிக்கார ஜெபமணி, அறியாமையை ஒட்டு மொத்தமாகக் குத்தகைக்கு எடுத்துக் கொண்டு தெளிவடைந்துள்ளதைக் காணுங்கள்.

விமர்சனம் 3

முகமது வரலாறு என்ற தலைப்பில் (பக்கம்23) வாயில் வந்தவாறு எல்லாம் உளறிக் கொட்டிவிட்டு அவர் மட்டும் தெளிவடைந்திருக்கிறார்.

அந்தத் தலைப்பில்

கதீஜாப் பிராட்டியார் யூத, சிரிய, கிறிஸ்தவ குடும்பத்தைச் சேர்ந்தவர் என்கிறார். முகமது, கதீஜாள் மூலம் சத்திய வேதத்தை மார்க்கத்தை அறிந்தார். கதீஜாவின் உறவினரும் போதகருமான வர்காபின் என்பவரைக் கொண்டு சத்தியத்தைத் தெளிவாக அறிந்து வந்தார். (அதாவது கிறிஸ்தவ மதத்தையும் பைபிளையும் கூறுகிறார் ஜெபமணி)

கி பி 619ல் கதிஜாள் மரித்தாள். முகமது சகல ஆஸ்திகளுடன் தன் ஜனத்தாரை அடைந்தார். அங்கு வாழ்ந்த சிலர் அவருடைய நாகிரீகத்தையும் அவர் வணக்க முறைகளையும் கண்டு அவரை விரும்பினர். அவர் வர்காபினிடம் கேட்டறிந்த சத்தியத்தை அவர்களுக்குப் போதிக்கையில் மெக்காவாசிகள் இப்புது உபதேசத்தால் வெகுண்டு கலகம் அடைந்து தங்கள் வணக்கங்கள் திருவிழாக்கள் நாசமடைந்து அதன் மூலம் அவர்கள் சம்பாதித்து வந்த வருமானங்களை இழந்து போக நேரிடும் என்று கண்டு இந்த உபதேசத்தைக் கை விடுமாறு பணித்தனர். வெகுமதிகளை முகம்மதுக்குத் தர முயன்றனர் என்கிறார் ஜெபமணி

(பக்கம் 23.24)

நமது பதில்

இதில் அவர் செய்த மோசடிகள் ஏராளம். அதை அனைத்தையும் விரிவாக அலசுவோம். முதலில் கதீஜா பிராட்டியார் யூத குடும்பத்தைச் சேர்ந்தவர் என்று ஜெபமணி நிலை நாட்டுவதற்கு என்ன காரணம் என்றால் யூத குலமே மனித சமுதாயத்தில் உயர்ந்த குலம்; அந்தக் குலத்தில் மட்டுமே தீர்க்கதரிசிகள் தோன்றுவர். அவர்கள் மாத்திரமே இறைவனுக்கு உவப்பானவர்கள் என்பது யூத கிறிஸ்தவ தலைமையின் நம்பிக்கை. யாராவது சத்தியத்தைச் சொன்னால் அவரை யூதர் என்பார்கள்; அல்லது யூதர்களிடம் தான் இவர் இதனைக் கற்றார்

என்பார்கள். யூதர்கள் வழியாக அல்லாமல் சத்தியம் வெளிவர முடியாது என்பதும் இவர்களது நம்பிக்கை.

இந்த நம்பிக்கை இன்று நேற்றல்ல. நபிகள் நாயகம் (ஸல்) காலத்திலேயே அவர்களிடம் குடி கொண்டிருந்ததைக் குர்ஆன் கூறுகிறது.

யூதர்களும் கிறுஸ்தவர்களும் நாங்களே அல்லாஹ்வுடைய குமாரர்களாகவும் அவனால் நேசிக்கப்பட்டவர்களாகவும் இருக்கின்றோம் என்று கூறிகின்றனர்.

(அல்குர்ஆன் 5:18)

இந்த உயர் ஜாதிப் புத்தி தான் கதீஜாவையும் வரக்காவையும் யூத குடும்பம் என்று ஜெபமணியைச் சொல்ல வைக்கின்றது. அவ்விருவரும் யூத குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் என்பதற்கு ஆதாரம் எதுவும் தந்திருக்கிறாரா ஜெபமணி? ஆதாரம் தந்தால் தான் புத்திசாலிகளின் பட்டிய லில் சேர்ந்து விடுவாரே.

ஆப்ரஹாமுக்கு இரு மகன்கள். ஒருவர் இஸ்மவேல். மற்றவர் ஈஸாக். ஈஸாக்வுடைய புதல்வர் தான் இஸ்ரவேல். இவர் வழியாகத் தோன்றியவர்களே யூதர்கள். இதன் அடிப்படையில் தான் ஜெபமணியைச் சேர்ந்தவர்கள் கூட இஸ்மவேல் இஸ்ரவேல் என்று குறிப்பிடுவார்கள்.

இஸ்மவேலர்களின் பரம்பரையில் வந்த எவரும் யூத குடும்பத்தைச் சேர்ந்தவராக இருக்க முடியாது. இஸ்மவேலர்களின் ஒரு கிளைக் குடும்பமே குரைஷிக்குலம். இந்த குறைஷிக் குலத்திலேயே முகமது தோன்றியதாக ஜெபமணி ஒப்புக் கொள்கிறார். (பக்கம் 23)

முகமது (ஸல்) எந்தக் குறைஷிக் குலத்தைச் சேர்ந்தவர்களோ அதே குறைஷிக் குலத்தைச் சேர்ந்தவர்கள் தான் அன்னை கதீஜாவும், வரக்கா பின் நவ்பலும். இதை ஒப்பு நோக்கி விளங்குவதற்காக முஹம்மது (ஸல்) அவர்களின் பாரம்பரியப் பட்டியலும் கதிஜா ரலி அவசர்களின் பாரம்பரியப் பட்டியலும் வரகா பின் நவ்பலின் பாரம்பரியப் பட்டியலும் தந்துள்ளோம். இரண்டும் எவ்வாறு ஒட்டி அமைந்துள்ளன என்பதை ஜெபமணிகள் உணரட்டும்.

முஹம்மது (ஸல்) கதீஜா(ரலி ) வரக்கா

காலிப் காலிப் காலிப் லுவை லுவை லுவை கஃபு கஃபு கஃபு முர்ரா முர்ரா முர்ரா கிலாப் கிலாப் கிலாப் குஸை குஸை குஸை அபதுல்முனாப் அப்துல் உஸ்ஸா அப்துல் உஸ்ஸா ஆ ஷிம் அஸத் அஸத் அப்துல் முத்தலிப் குவை த் நவ்பல் அப்துல்லாஹ் கதீஜா வரக்கா முஹம்மது (ஸல்)

(ஆதாரம்: இப்னு ஹிஷாம் அவர்களின் நபி வரலாறு என்ற நூல்)

முஹம்மது (ஸல்) அவர்கள் எப்படி இஸ்மவேலர்களடங்கிய குஸை என்பாரின் பரம்பரையில் தோன்றினார்களோ அந்தப் பரம்பரையிலே தான் கதீஜாவும் வரக்காவும் பிறக்கிறார்கள்.

வரக்கா பின் நவ்பல் அவர்கள் குறைஷிக் குலத்தில் பிறந்த பின்னர் கிறித்தவ மார்க்கத்தைத் தழுவிக் கொண்டவர் என்பதே உண்மை.

ஜெபமணி தனது நூலின் முன்னுரையில் என்ன ஆச்சரியம் ஆண்டவர் என் கரத்தைப் பிடித்து நான் அரியாத வேத இரகசியத்தையெல்லாம் எனக்குள் உணர்த்தி எழுவதை உணர்ந்தேன். என் கைகள் எழுதிய போதிலும் எழுதிய விபரம் என்னிடமிருந்து வெளிப்பட்டதில்லை என்பதை திருப்பி வாசித்த போது கண்டேன். வேத புத்தகத்தை குர்ரான் ஹதீஸ் நூல்களைப் புரட்டும் போதெல்லாம் என் கண்கள் உற்று நோக்கும் இடத்தில் எழுதுவதற்கு ஆதாரமான வசனங்கள் இருப்பதைக் கண்டு உண்மையாய் அதிசயித்தேன். ஆண்டவராலேயல்லாமல் எந்த ஒரு மனிதரிடமோ வேத பண்டிதர்களிடமோ அவர்கள் எழுதிய நூல்களி லிருந்தோ ஒன்றையும் நான் கேட்டோ வாசித்தோ அறியவில்லை என்பதற்கு தேவன் மாத்திரமே சாட்சி

(பக்கம் 6)

என்று குறிப்ப்பிட்டுள்ளார்.

ஜெபமணியாரே கலீலுல்லாஹ் என்றால் அல்லாஹ் என்று அர்த்தம் செய்தீரே அதுவும் கூட உமது ஆண்டவர் கையைப் பிடித்து எழுதியது தானா?

17;85 என்று போட்டு உளறினீரே அதுவும் ஆண்டவனின் கிருபா கடாட்சம் தானா?

கதீஜாளும், வர்காபினும் யூத குடும்பத்தைச் சேர்ந்தவர் என புருடா விட்டீரே அதுவும் பரலோகத்திலிருக்கிற பிதா உம் கையைப் பிடித்து எழுதியது தானா?

குர்ரானும் ஹதீஸும் தேவையான போது உம் கண்களுக்கு காட்சி தருவதாகக் கூறுகிறீரே ஆதாரப்பூர்வமான ஹதீஸ் மட்டும் உம் கண்ணில் படாமல் போனதும் அந்த தேவனின் மகிமை தானா? அந்தச் சமயத்தில் மட்டும் பரமண்டலத்தில் இருக்கும் பிதா உம் கையை உதறி விட்டாரா? அந்த ஹதீஸை அப்படியே தருகிறோம்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு முதன் முறையாக வஹீ வந்ததும் கதீஜா (ரலீ) யிடம் வந்து தன்னைப் போர்த்துமாறு கூறியதும் அவர்கள் நபி (ஸல்) அவர்களுக்கு ஆறுதல் கூறினார்கள். பின்னர் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களைத் தமது தந்தையின் சகோதரரான நவ்பல் என்பவரிடம் அழைத்துச் சென்றார்கள். நவ்பல் என்பார் அஸது என்பாரின் மகனும் அஸது என்பார் அப்துல் உஸ்ஸா என்பாரின் மகனுமாவார். வரக்கா அவர்கள் அறியாமைக் காலத்திலேயே கிறித்துவ மார்க்கத்தைத் தழுவியவராக இருந்தார். மேலும் அவர் ஹீப்ரு மொழியில் தேர்ந்தவராகவும் (அராமிக் மொழி வேதமான) இன்ஜீலை ஹீப்ரு மொழியில் அல்லாஹ் நாடிய அளவுக்கு எழுதி வைத்தவராகவும் இருந்தார். மேலும் அவர் கண்பார்வையற்ற பெரும் வயோதிகராகவும் இருந்தார். அவரிடம் கதீஜா (ர லி) அவர்கள் என் தந்தையின் சகோதரனின் மகனே! உமது சகோதரன் மகன் கூறுவதைக் கேளுங்கள். என்றார்கள். நீர் என்ன கண்டீர்? என்று வரகா அவர்கள் நபிகள் நாயகம் ஸல் அவர்களிடம் கேட்டார்கள். நபி (ஸல்) அவர்கள் தாம் கண்டதைக் கூற அவர்கள் வந்தவர் ஜிப்ரீல் தான் என்று உறுதிப்படுத்தினார். இந்நிகழ்ச்சிக்குப் பின் வரக்கா அவர்கள் எந்தச் செய லும் ஈடுபடாமல் இறந்து விட்டார்கள்

(புகாரி ஹதீஸ் எண் 3

பரலோகத்தில் இருக்கின்ற பரம பிதா ஜெபமணிக்கு இந்த ஹதீஸைக் காண்பிக்கவில்லை போலும். தேவனே தன் கையைப் பிடித்து எழுதச்

செய்ததாக உளறும் ஜெபமணியின் கூற்றுப் படி இதுவரை இவ்வளவு அறியாமையும் முட்டாள் தனமும் இவருடைய வாதங்களில் காணப்படுகிறதே இன்னும் பல அபத்தங்களைக் காணவிருக்கிறோமே அந்த அபத்தங்கள் கூட தேவனுடையது தானா?

வர்காபிடம் முஹம்மது சத்தியத்தைக் கற்றார் என்ற ஜெபமணியின் கூற்றும் தவறானது என்பதை மேலும் காண்போம்.

இறைவன் ஒருவன் தான்; ஆனால் அவனுக்கு ஒரு மகன் உண்டு. அந்த மகனுக்கு ஒரு தாய் உண்டு அந்த மகனுக்கும் தாய்க்கும் இறைமையில் பங்குண்டு. ஒன்றாக உள்ள இறைவன் மூன்றாக இருக்கிறார் என்பது அன்றைய மற்றும் இன்றைய கிறிஸ்துவ நம்பிக்கை.

வரக்காவிடம் முஹம்மது (ஸல்) பாடம் படித்திருந்தால் அந்தப் போதனைக்கு மாற்றமாக இறைவன் ஒருவனே; அவனுக்கு இணையில்லை; அவன் தேவையற்றவன்; அவன் யாரையும் பெறவில்லை; யாராலும் பெறப்படவில்லை; அவன் தான் படைப்பாளன்; உணவளிப்பவன்; உரிமையாளன்.; சட்டமயற்றுபவன் என்றெல்லாம் முஹம்மது (ஸல்) போதித்திருப்பார்களா?

முஹம்மது (ஸல்) எதைப் போதித்தார்களோ அதையே வரக்காவிடம் கற்றார் என்று ஜெபமணி வாதிட்டால் மற்றொரு உண்மையை அவர் ஒப்புக் கொண்டவராகி விடுகிறார். அதாவது வரக்கா முஹம்மது (ஸல்) அவர்களுக்குப் போதித்த கொள்கை தான் சத்தியம் என்று ஜெபமணி ஏற்றுக் கொண்டவராகிறார். அப்படியானால் வரக்காவிடம் முஹம்மது (ஸல்) கற்ற கொள்கைக்கு மாற்றமாக இன்றைய கிறிஸ்தவர்களின் கொள்கை அமைந்துள்ளதே இக்கொள்கை பிற்காலத்தில் திணிக்கப்பட்டது தான் என்பதை ஜெபமணி ஒப்புக் கொள்வாரா?

ஜெபமணியின் வாதப்படி வரக்கா போன்ற அன்றைய கிறிஸ்துவ மூத்த அறிஞர்கள் இறைவனுக்கு மனைவி மக்களில்லை என்று கொள்கையை

வைத்திருக்கும் போது, அதை முஹம்மதுவுக்கும் போதித்திருக்கும் போது இதற்கு முரணாக பின்னர் திட்டமிட்டு திணிக்கப்பட்ட கிறிஸ்தவக் கொள்கையி ருந்து ஜெபமணி விலகிக் கொள்வாரா?

ஒன்று முஹம்மது (ஸல்) வரக்காவிடம் எதையும் கற்கவில்லை என்பதை அவர் ஒப்புக் கொள்ள வேண்டும். அல்லது வரக்காவிடம் கற்றார் என்றே சாதித்தால் வரக்கா போன்ற முற்காலப் பாதிரிகள் என்ன கொள்கையை முஹம்மதுவுக்கு போதித்தார்களோ அதை அதாவது இஸ்லாத்தை ஏற்றாக வேண்டும். இரண்டில் எதைச் செய்யப் போகிறார் திருவாளர் ஜெபமணி.

அவர் வர்காபினிடம் கேட்டறிந்த சத்தியத்தை அவர்களுக்குப் போதிக்கையில் மெக்காவாசிகள் இப்புது உபதேசத்தால் வெகுண்டு கலக்கம் அடைந்து தங்கள் வணக்கங்கள் திருவிழாக்கள் நாசமடைந்து அதன் மூலம் அவர்கள் சம்பாதித்து வந்த வருமானங்களை இழந்து போக நேரிடும் என்று கண்டு இந்த உபதேசத்தைக் கைவிடுமாறு பணித்தார்கள் என்று ஜெபமணி முன்னர் தாம் குறிப்பிட்ட பாராவில் குறிப்பிட்டுள்ளார்.

இதிலிருந்து மதத்தின் பெயரால் மக்களைச் சுரண்டி பிழைப்பதையும், புரோகிதத்தையும் முஹம்மது (ஸல்) கடுமையாக எதிர்த்துள்ளார் என்பதை ஒப்புக் கொள்கிறார் ஜெபமணி. இந்தக் கொள்கையை ஜெபமணியின் வாதப்படி வர்காபினிடம் அவர் கற்றறிந்ததால் வர்காபுடைய காலத்தில் கிறிஸ்துவ மார்க்கத்திலும் புரோகிதம் இருக்கவில்லை என்பது தெளிவு. ஜெபமணி போன்றவர்களே அதைப் பின்னர் தங்கள் இலாபத்திற்காக உருவாக்கிக் கொண்டார்கள் என்பதும் தெளிவு. புரோகிதத்தை எதிர்த்துப் போராடுவதை எந்த வர்காபினிடம் அவர் கற்றாரோ அந்த போதனையை ஜெபமணியும் அவரது காலத்தவர்களும் மறந்தது ஏன்?

வர்காவும் புரோகிதத்தை ஆதரிப்பவராக இருந்தார் என்று ஜெபமணி கூறினால் புரோகிதத்தை ஆதரிப்பவரிடமிருந்து புரோகிதத்தை எதிர்க்கின்ற ஞானத்தையும் துணிவையும் முஹம்மது (ஸல்) பெற்றிருக்க முடியுமா? குழப்பமே உனது மறு பெயர் தான் ஜெபமணியோ?

முஹம்மதுவுக்கு வெகுமதிகளைத் தர முயன்றனர் என்று ஜெபமணி கூறுவதன் மூலம் முகமது எதற்கும் அஞ்ஞாதவர்; விலை போகாதவர் என்பதை ஜெபமணி பகிரங்கமாக ஒப்புக் கொள்கிறார். அவர் எழுதியதிலேயே இந்த வாசகம் மட்டும் தான் உண்மை.

அடுத்து வர்காவிடம் முஹம்மது (ஸல்) சத்தியத்தைக் கற்றார் என்று ஜெபமணி கூறியிருக்கிறார் அல்லவா? அதே வரக்கா முஹம்மதுவை இறைத் தூதர் இறுதித் தூதர் என்று நற்சான்று வழங்கினாரே அதனடிப்படையில் முஹம்மது இறைவனின் இறுதித் தூதர் தான் என்பதையும் ஜெபமணி ஏற்றுக் கொள்ள வேண்டும்.

விமர்சனம் 4

இன்னும் திருக்குர்ஆனின் வசன எண்களைக் குறிப்பிட்டு இவர் செய்துள்ள தில்லுமுள்ளகள் ஏராளம். இவர் தனது ஆய்வுக்கு எடுத்துக் கொண்டதாக கூறும் மேற்கோள் நூலான தமிழ்க் குர்ரான் ஆ.கா.அப்துல்கமீது பாகவியின் மொழி பெயர்ப்பு ஆகும். (பக்கம்111)

நம்மிடம் அந்தத் தமிழ்க் குர்ரான் உள்ளது. இவர் எண்கள் எடுத்துக் கொடுத்திருக்கும் வசனங்களின் விளக்கத்தை அதே எண்ணில் தேடிப் பார்க்கும் போது இவரின் பித்தலாட்டங்கள் அப்பட்டமாக அம்பலமாகின்றன. சான்றுக்குச் சிலவற்றைக் காண்பிப்போம்.

20:90. 19:18. 19:87 ல் கியாமத் (நியாயத் தீர்ப்பு) நாளில் பரிந்து பேசுபவன் அந்த ரஹ்மான் என்றும் கூறுகிறது 3:164 ல் அந்த ரட்சகனை யூதரி லிருந்து எழும்பப் பண்ணுவதாகவும் கூறுகிறது (பக்கம் 49) என்கிறார்.

நமது பதில்

ஆனால் இவர் குறிப்பிட்ட எண்களுக்கும் இவர் குறிப்பிட்ட விவரத்திற்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை. சரியான மொழி பெயர்ப்புகளோ தவறான கொள்கையின் மீது எழுதப்பட்டிருக்கும் கிருத்தவக் கோட்டையைத் தகர்த்தெரியும் சம்மட்டிகளாகவே இருக்கின்றன.
இதற்கு முன்னதாகவே ஹாரூன் அவர்களை நோக்கி என்னுடைய ஜனங்களே நீங்கள் வழி தப்பி விட்டீர்கள் நிச்சயமாக உங்கள் இறைவன் ரஹ்மான் தான். என்னைப் பின்பற்றுங்கள். என்னுடைய கட்டளைக்கு வழிப்படுங்கள் என்று கூறினார்

திருக்குர்ஆன் 20:90

இங்கே கியாமத் பற்றியோ பரிந்துரை பற்றியோ கூறப்படவில்லை இஸ்ரவேலர்களான யூதர்கள் மெய்வழி மறந்து பொய் வழி புகுந்ததையும் ஹாரூன் (அலை) கூறுவதாகவும் ஹாரூனுக்கு மேலே ஒரு ரஹ்மான் இருக்கிறான் என்பதையும் தான் கூறுகிறது.

நிச்சயமாக நான் உம்மிடமிருந்து என்னை இரட்சித்துக் கொள்ளுமாறு ரஹ்மானிடம் பிரார்த்திக்கிறேன்

திருக்குர்ஆன் 19:18

இது தான் அவர் குறிப்பிட்ட வசனத்தின் பொருள் இதிலும் கியாமத் பற்றியோ பரிந்துரை பற்றியோ எதுவுமில்லை. மாறாக கிறித்துவர்கள் கடவுளாகவும் கடவுளைப் பெற்றெடுத்தாகவும் கன்னித்தாயாகவும் வணங்கும் மேரி என்ற மர்யம் (அலை) அவர்களின் கூற்றாக அந்த வசனம் அமைந்துள்ளது. கடவுளின் குமாரரோ கடவுளின் தாயோ தன்னைத் தானே தற்காத்துக் கொள்ள முடியாமல் தனக்கும் கடவுளான ரஹ்மானிடம் பாதுகாப்பைத் தான் தேடியதைத் தான் 19:18 வசனம் கூறுகிறது.

ரஹ்மானிடம் அனுமதி பெற்றவர்களைத் தவிர எவரும் சிபாரிசு பேசச் சக்தி பெற மாட்டார்

திருக்குர்ஆன் 19:87

ஏசுவாக இருந்தாலும் அவரால் கூட கியாமத்தில் எதுவும் செய்ய முடியாது என்பது ஒரு புறமிருக்க பரிந்து பேசுவதற்குக் கூட இறைவனின் அனுமதியின்றி இயலாது என்று கூறி கிறிஸ்துவ நம்பிக்கையை இவ்வசனம் தகர்க்கிறது. இதிலும் இவர் கூறிய கருத்து எதுவுமே இல்லை.

3:164 ல் அந்த ரட்சகனை யூதரிலிருந்து எழும்பப் பண்ணுவதாகக் கூறுகிறது என்கிறார் ஜெபமணி (பக்கம் 49)

அல்லாஹ் விசுவாசிகளின் மீது மெய்யாகவே அருள் புரிந்திருக்கிறான். அவர்களுக்காக ஒரு தூதரை அவர்களிலிருந்தே எழுந்தருளச் செய்தான். என்பது 3:164 வசனம்.

இங்கே ரட்சகனை எழும்பப் பண்ணுவதாக எதுவுமே இல்லை. ரட்சகன் தான் கூறக் கூடியதைக் கூட்டாமல் குறைக்காமல் அப்படியே மக்களிடம் எடுத்துச் சொல்லும் தனது தூதரை அனுப்புவதாகவே கூறுகிறான். மேலும்

யூதர்களிலிருந்து என்றும் இவ்வசனம் கூறவில்லை. அவர்களிலிருந்து என்று மட்டும் இறைவன் இங்கே கூறுகிறான். அவர்கள் என்றால் எவர்கள்?

ஜெபமணி முஹம்மது (ஸல்) அவர்களின் சமுதாயத்தை உம்மிகள் என்று ஒப்புக் கொள்கிறார்கள். முஹம்மதுவின் சீடர்கள் உம்மிகள் (பக்கம் 30)

3:164 வசனத்திற்கு தொடர்பான மற்றொரு வசனம் 62:2 வசனமாகும்.

இந்த வசனத்தில் எழுத்தறிவில்லாத ஜனங்களுக்காக அவர்களிலேயே ஒரு தூதரை அவன் அனுப்பி வைத்தான்(62:2)

இதன் மூலம் அவர்களிலிருந்தே என்பது யூதர்களைக் குறிக்கவில்லை. உம்மிகளை அதாவது அரபுகளைத் தான் குறிக்கிறது. அந்த உம்மிகளுக்கு தூதராக அனுப்பப்பட்டவர் முஹம்மது (ஸல்) அவர்கள் தான் என்பதில் சந்தேகம் இல்லை.

திருக்குர்ஆன் மட்டுமல்ல. இவர் கூறும் முன்னறிவிப்பு உபாகமம் 18:18ல் கர்த்தர் மேசேயிடம் கூறிய விபரத்தில் இடம் பெற்றுள்ளது. உன்னைப் போல் ஒரு தீர்க்கத்தரிசியை நான் அவர்களுக்காக அவர்கள் சகோதரரில் இருந்து எழுப்பப் பண்ணி என் வார்த்தைகளை அவர் வாயில் அருளுவேன். நான் அவருக்குக் கற்பிப்பதையெல்லாம் அவர்களுக்குச் சொல்லுவார் என்பது அந்த வசனம்.

இவ்வசனத்தில் அவர் சகோதரர் என்பது யாரைக் குறிக்கும்?

மேலும் உபாகமம் 34:12ல் முகமுகமாய் அறிந்த மேஸேயைப் போல் ஒரு தீர்க்கத்தரிசியும் இஸ்ரவேலில் அப்புறம் எழும்பினதில்லை என்று விளங்கும் என்று கூறப்படுவதில் இருந்து இதை அறியலாம்..

மேஸேயைப் போல் ஒரு தீர்க்கதரிசி இஸ்ரவேலரில் எழும்பவில்லை. ஆனால் அவர்கள் சகோதரராகிய இஸ்மவேலரில் எழுந்தார். உன்னைப் போல் ஒரு தீர்க்கததரிசியை என்பது முஹம்மது (ஸல்) அவர்களைத் தான் குறிக்கும் என்பதில் சந்தேகம் இல்லை.

மோசேவுக்கும் முஹம்மத் (ஸல்) அவர்களுக்கும் தெளிவான வாழ்க்கைச் சட்டம் அருளப்பட்டது. இருவரும் எதிரிகளைச் சந்தித்தனர். அற்புதமான வழிகளால் வென்றனர். இருவருமே இறைத் தூதர்களாகவும் இராஜ்ய நிர்வாகிகளாகவும் இருந்தனர். இருவரும் கொலைச் சதிக்குப் பயந்து நாடு துறந்தனர். இவற்றிற்கு மேலாக இருவரும் தந்தை தாய் இணைந்து பிறந்தனர். மணமுடித்தனர். மக்களைப் பெற்றனர். குடும்பத் தலைவர்களாயினர்.

ஆனால் யூதரில் எழுந்த இயேசு இப்படி எதிலுமே மோஸேயுடன் ஒத்துப் போகவில்லை. எனவே இங்கே இயேசுவைக் கூறுவது அபத்தத்திலும் அபத்தம் குர்ஆன் 3:164வசனத்தில் கூறப்படுவதும் உம்மிகளில் உதித்த முஹம்மது (ஸல்) அவர்களைத் தான்.

இந்த வசனத்தில் கூறப்படுவது ஈஸாவைப் பற்றியே என்று கூறுவதன் மூலமும் தூதரை இரட்சகராக ஆக்கியதின் மூலமும் இரண்டு மோசடிகளைச் செய்திருக்கிறார் ஜெபமணி.

விமர்சனம் 5

அவரது மோசடியையும் அறியாமையையும் இன்னும் பாருங்கள் குர்ஆன் 21:42 ல் பகலிலோ இரவிலோ மானிடர் அறியாத வேளையில் வருகிறவர் நரக வேதனையி லிருந்து விடுவிப்பவர் என்றும் கூறுகிறது என்கிறார் ஜெபமணி (பக்கம்50)

நமது பதில்

அதாவது இத்தகைய தன்மை ஏசுவுக்கு உண்டு என்றும் அவரையே இவ்வசனம் கூறுகிறது என்றும் குறிப்பிடுகிறார் ஜெபமணி. உண்மையில் அந்த வசனம் கூறுவது என்ன?

இரவிலோ பகலிலோ வரக்கூடிய ரஹ்மானுடைய வேதனையிலிருந்து எங்களை இரட்சிப்பவர் யார் என்று நீர் கேளும்

(அல்குர்ஆன் 21:42)

இதற்கும் ஜெபமணி கூறுவதற்கும் ஏதாவது சம்மந்தமிருக்கிறதா? இவரை விட அறிவிலியை உலகம் கண்டிருக்கிறதா? ஜெபமணி நாய் என்பதை எப்படி ஜெபமணி புரிந்து கொள்வாரோ அதே போல் தான் ரஹ்மானுடைய வேதனை என்பதை ரஹ்மான் என்று விளங்குகிறார்.

இப்புத்தகம் முழுவதும் எதை விட எதை சேர்க்க என்று தெரியாத அளவுக்கு மோசடிகள் மலிந்து உள்ளன. இவரது அறியாமைக்கு இன்னும் சில சான்றுகளையும் பாருங்கள்.

விமர்சனம் 6

குர்ஆன் 25:48. 27:63 பரிசுத்த ஆவியானவரை மழை காற்றாக உவமிக்கின்றது 2;87 66;12ல் இந்த துய ஆவியால் ஏசு பிறந்ததாவும் கூறுகிறது. (பக்கம் 51) என்று ஜெபமணி எழுதுகிறார்.

நமது பதில்

ஆனால் இவ்வசனங்கள் கூறுவதென்ன? அல்லாஹ் நிழலைக் கூட்டிக் குறைப்பது பற்றியும் சூரியனை நிழலுக்கு முன்னோடியாக்கியது பற்றியும் இரவை சிரமபரிகாரத்திற்குரிய நித்திரைக்காகவும் பகலை நடமாட்டத்துக்காகவும் படைத்தது பற்றிக் கூறிவிட்டு அடுத்த வசனங்களில் அவன் தான் அருள் மாரிக்கு முன்னதாக காற்றை நன்மாராயமாக அனுப்பி வைக்கிறான் (25;48) என்றும்

மேகத்திலிருந்து பரிசுத்தமான தண்ணீர் தருவது பற்றியும் கூறுகிறான்.

அதே மாதிரி 27;93 வசனம் என்ன கூறுகிறது தெரியுமா?

கடலிலோ கரையிலோ இருள்களிலோ உங்களுக்கு வழிகாண்பிப்பவன் யார்? அவனுடைய அருள்மாரிக்கு முன்னதாகக் காற்றை நன்மாராயமாக அனுப்பி வைப்பவன் யார்? என்று கூறப்படுகிறது.

மழை பெய்யுமுன் காற்று வருவதை இறைவன் கூற இவர் அக்காற்றையே பரிசுத்த ஆவியாகக் கற்பனை செய்து கொள்கிறார்.

அதே மாதிரி 2;87 ல் பரிசுத்த ஆவி (ரூஹுல் குத்ஸ்) என்று சொல்லப்படும் ஜிப்ரயீலையும் 66;12ல் இறைவன் புறத்திலிருந்து மர்யம் (அலை) அவர்களின் கர்ப்பத்தில் ஊதப்பட்ட ஆவியையும் இறைவன் குறிப்பிடுகிறான். இதை நாம் மறுக்கவில்லை. கிறித்துவக் கொள்கையை நிலை நாட்டுவதற்கும் இதற்கும் எந்தத் தொடர்பும் இல்லை என்கிறோம்.

(ஆவியில் இட்லி வேகும் என்றால் கூட பரிசுத்த ஆவியைத் தான் கூறுவதாக மக்களைக் குழப்புவது கிறித்தவ மத குருமார்களின் வழக்கம்)

விமர்சனம் 7

தூய ஆவியைக் குறித்து குர்ஆன் 17:39 ல் மகாமே மஹ்மூத் என்றும் கூறுகிறது என்கிறார் ஜெபமணி. (பக்கம் 51)

நமது பதில்

ஆனால் 17:39 ல் இறைவன் கூறுவதென்ன?
இவை உம் இறைவனால் உமக்கு வஹி மூலம் அருளப்பட்டது. ஆகவே அல்லாஹ்வுடன் மற்றோரு ஆண்டவனை ஆக்காதீர். நீர் நிந்திக்கப்பட்டவராகவும் சபிக்கப்பட்டவராகவும் நரகத்தில் தூக்கி எறியப்படுவீர் என்பது தான் அந்த வசனம்.

ஆண்டவனுக்கு இணையாக கிறிஸ்தவர்கள் அவனுக்கு குமாரன் இருப்பதாகக் கற்பனை செய்தது போல் செய்யலாகாது என்று கடுமையான எச்சரிக்கை தான் இவ்வசனத்தில் இருக்கிறது. பரலோகத்தில் இருக்கும் பிதா தான் இவரது கையைப் பிடித்து இப்படி எழுதச் செய்திருக்கிறார் என்பது இப்போது புரிகிறதல்லவா?

மகாமே மஹ்மூத் பற்றி இவர் குறிப்பிடாத மற்றொரு வசனம் குறிப்பிடுவது உண்மையே. அதற்கும் பரிசுத்த ஆவிக்கும் எந்தச் சம்பந்தமும் கிடையாது. நபியே உம்மை மகாமே மஹ்மூதில் (உயர்ந்த இடத்தில்) உம் இறைவன் எழுப்புவான் என்று அந்த வசனம் கூறுகிறது.

விமர்சனம் 8

குர்ஆன் 17:85 ல் முகமது ரூஹிமின் அல்லாஹ்வைக் குறித்து மிகச் சொற்ப ஞானமே தமக்கு அருளப்பட்டதாக கூறுகிறார் என ஜெபமணி கூறுகிறார். (பக்கம் 54)

நமது பதில்

இந்த வசனம் எதைக் குறிக்கிறது என்பதை முன்னர் இரண்டாவது விமர்சனத்தில் நாம் தெளிவுபடுத்தி விட்டோம். ஜெபமணி குர்ஆனில் ஈஸா (அலை) பற்றி வரும் ரூஹுல் குத்ஸ் என்ற சொல்லையும் பொதுவாக இறைவன் தன் ஆதிக்கத்தில் வைத்திருக்கும் ரூஹு ஆவி என்ற சொற்களையும் ஒன்றாகக் கருதி தானும் குழம்பி மற்றவர்களையும் குழப்புகிறார். இவரை இப்படியே விட்டால் நீராவியைக் கூட பரிசுத்த ஆவு என்று சொன்னாலும் சொல்வார் போலும் என்று தெரிகிறது.

விமர்சனம் 9

முஹம்மதுவின் 40 வது வயதில் யூத சடங்காச்சாரத்திற்கு ஏற்ப ஹிர்ரா மலைக் குகையில் தங்கி கிபி 610 ல் உபவாசித்து வந்தார். இது சமயம் குர்ரா என்ற ஒ லியில் திகிலடைந்து பயந்து நடுங்கி கதீஜாவிடம் வந்தார். கதீஜாள் தன் உறவினரான வர்காபினுக்குத் தெரிவித்து அவர் முஹமதுவுக்குக் கேட்ட சத்தம் குறித்து தெளிவுபடுத்தினார். முகமதுவை ஆண்டவனுக்கு ஊழியக்காரன் ஆகும்படி ஆலோசனை கொடுத்தார். அவர் வேத சத்தியத்தையும் போதித்தார் என்பதையும் குர்ரானில்16:103. 6:7. 80:15. 69:39. 4ல் காண்கிறோம் என்று கூறுகிறார் ஜெபமணி. (பக்கம்24)

நமது பதில்

அதாவது முஹம்மது (ஸல்) அவர்களுக்கு வேத வெளிப்பாடுகளை சத்தியத்தைப் போதித்தது வர்காபின் நவ்பல் என்ற கிருத்தவரே என்பது இவரது வாதம். அதற்குச் சான்றாக சில வசனங்களையும் எண்கள் குறிப்பிட்டு எழுதியிருக்கிறார்.

முஹம்மது (ஸல்) அவர்களுக்கு வேதம் வந்ததது பற்றி வர்கா பின் நவ்ப லிடம் கூறிய ஒரு சில நாட்களிலே வர்காபின் நவ்பல் இறந்து விட்டார் என்பதை (புகாரி ஹதீஸ் எண் 3) முன்னர் குறிப்பிட்டு உள்ளோம். அதன் பிறகு இருபத்தி மூன்று ஆண்டுகள் முஹம்மது (ஸல்) அவர்களுக்கு வேத வெளிப்பாடு வந்து கொண்டிருந்தது.

முஹம்மது (ஸல்) அவர்களுக்கு வேதம் கிடைக்கத் துவங்கிய ஆரம்ப காலத்திலேயே மரணித்துவிட்ட ஒருவர் எப்படி 23 ஆண்டுகளாக முஹம்மதுவுக்கு வேத சத்தியத்தைக் கொடுத்திருப்பார்? இவர் தனது கூற்றுக்கு குர்ஆன் வசனங்களையே சான்றாகக் காட்டுவது தான் பெரிய வேடிக்கை.

அவர் குறிப்பிட்டுள்ள 16:103 வசனம் கூறுவதென்ன?

ஒரு மனிதனே அவருக்கு கற்றுக் கொடுக்கிறான் என்று அவர்கள் கூறுவதை நாம் அறிவோம். எவன் கற்றுக் கொடுப்பதாக அவர்கள் கூறுகிறார்களோ

அவனுடைய மொழி அஜமி (அரபியல்லாத மொழி). இவ்வேதமோ மிகத் தெளிவான அரபி மொழியில் இருக்கிறது.

இது தான் ஜெபமணி தன் கூற்றுக்குச் சான்றாக்கும் வசனத்தின் மொழி பெயர்ப்பாகும் அதாவது முஹம்மது (ஸல்) காலத்திலேயே இது போன்ற குற்றச் சாட்டுகள் சொல்லப்பட்டதுண்டு. ஒரு மனிதர் வந்து கற்றுக் கொடுப்பதை அப்படியே முஹம்மது கூறுகிறார் என்பதே அக்குற்றச்சாட்டு.

கற்றுத் தரப்படபவர் என்று கூறப்படுபவருக்கோ அரபி மொழி தெரியாது. கற்றுக் கொண்டதாகக் கூறப்படும் முஹம்மது (ஸல்) அவர்களுக்கோ அரபு பொழி தவிர வேறு மொழி பேசத் தெரியாது. இந்தக் குர்ஆனோ மிகத் தெளிவான அரபு மொழியில் அமைந்துள்ளது. அவ்வாறிருக்க அந்த மனிதன் கற்றுத் தருகிறான் என்பது எப்படி சரியாகும்? என்று அர்குர்ஆனே பதில் அளிக்கிறது.

ஜெபமணியின் குற்றச்சாட்டுக்கு மறுப்பு தரும் விதமாக அமைந்துள்ள வசனத்தையே தன் கூற்றுக்கு சான்றாக்குபவனை விட அடி முட்டாள் வேறு யார் இருக்க முடியும்.

அடுத்து அவர் குறிப்பிடும் வசன எண் 6:7 இந்த வசனம் கூறுவதென்ன என்பதைப் பார்ப்போம்.

காகிதத்தில் எழுதப்பட்ட ஒரு வேதத்தையே நாம் உம்மீது அருள் செய்து அதனை அவர்கள் தம் கைகளால் தொட்டுப் பார்த்திருந்த போதும் இது பகிரங்கமான சூனியத்தைத் தவிர வேறில்லை என்றே நிச்சயமாக நிராகரிப்போர் கூறியிருப்பார்கள்

(அல்குர்ஆன் 6:7)

அல்குர்ஆனை இறை வேதமல்ல என்று கூறும் நிராகரிப்பவர்கள் காரணங்களுடன் அவ்வாறு கூறுவதில்லை. புத்தகமாக வானி லிருந்து வேதத்தை இறக்கி வைத்து அதனை அவர்கள் தொட்டுப் பார்த்தாலும் மறுப்பார்கள் என்று இறைவன் கூறுவதன் மூலம் அவர்கள் சத்தியமென உணர்ந்து கொண்டு மணமுரண்டாகவே மறுக்கின்றனர் என்கிறது இவ்வசனம்.

ஜெபமணி போன்றவர்களை வெளிச்சம் போட்டுக் காண்பிக்கும் இந்த வசனத்தையும் கூட அவர் தனக்கு ஆதாரம் என்று கூறும் பேதமையை என்னவென்பது?

அடுத்து அவர் குறிப்பிட்ட வசனம் கூறுவதைப் பாருங்கள்!

லவ்ஹுல் மஹ்பூல் என்னும் மிக்க கண்ணியமான பதிவுப் புத்தகத்தில் வரையப்பட்டுள்ள இவ்வேதம் மிக்க மேலான இடத்தில் வைக்கப்பட்டுள்ளது

(80:15.16)

அல்குர்ஆன் இறைவன் வசமுள்ள பாதுகாக்கப்பட்ட ஏட்டிலிருந்து அருளப்பட்ட உண்மை வேதம் என்கிறது. இதையும் கூட ஜெபமணியால் புரிந்து கொள்ள முடியவில்லை.

அவர் எடுத்துக் காட்டிய மற்றொரு வசனம் 69:39.40 ஆகும். அவ்வசனங்கள் கூறுவதென்ன?

நீங்கள் பார்க்காதவைகளின் மீதும் சத்தியமாக இது நிச்சயமாக மிக்க சங்கை பொருந்திய (ஜிப்ரீல் என்னும்) தூதர் வழியாகக் கூறப்பட்டதாகும்.; என்கின்றன அவ்வசனங்கள்.

வரகாவோ மற்ற யாருமோ முஹம்மதுவுக்கு எதையும் கற்பித்ததில்லை. மாறாக இறைவனாலேயே அருளப்பட்டது தான் என்பதை இவ்வசனங்கள் யாவும் தெள்ளத் தெளிவாக அறிவிக்கின்றன. எவற்றுக்குப் பாதகமாக இவ்வசனங்கள் அமைந்துள்ளனவோ அவற்றுக்குச் சாதகமானதாக இவ்வசனங்களை விளங்கிக் கொண்ட மதியீனத்தைப் பாருங்கள்.

முகமதுவுக்கு முன் வேதத்தை வர்காபின் போதித்தார். அஜமு மொழியில் தாம் கேட்டவற்றை தமது சகோதரர்களுக்கு முகமது அரபு மொழியில் சொன்னார் என்ற ஜெபமணியின் கூற்றுக்கும் (பக்கம் 37) இவ்வசனங்களுக்கும் சம்பந்தமிருக்கிறதா மறுப்பு இருக்கிறதா என்பதை அறிவுடையோர் சிந்திக்கட்டும்.

விமர்சனம் 10

ஜெபமணியின் கருத்து மோசடிகளைச் சொல்லிக் கொண்டே போனால் நீண்டு விடும். எனவே இறுதியாக மிக முக்கியமான மோசடி ஒன்றை குர்ஆனின் பெயரால் செய்திருப்பதை சுட்டிக் காட்டுவது அவசியமாகிறது.

19:19. 3:39 லும் ஏசுவை குலமன் சக்கியான் (பரிசுத்தர்) இப்னுல்லாஹ் (தேவ மைந்தர்) என்றும் கூறியுள்ளது (பக்கம் 55)

இஸ்லாம் எந்த தேவ மைந்தன் கொள்கையை ஆழமாகவும், அழுத்தமாகவும் ஆணித்தரமாகவும் குர்ஆன் நெடுகிலும் மறுத்துரைக்கின்றதோ அந்தக் கொள்கையே குர்ஆனில் உள்ளது என்று கூறச் துணிந்து விட்ட இந்த மோசடிப் பேர்வழியை என்னவென்பது?

அவர் குறிப்பிட்ட வசனங்களிலோ, ஏனைய வசனங்களிலோ எவ்விடத்திலும் ஏசுவை தேவ மைந்தன் என்று சொல்லப்படவேயில்லை. மறாக இறைவனுக்கு மக்களில்லை என்பதை அல்குர்ஆன் தெளிவாகவே எடுத்துச் சொல்லிக் கொண்டிருக்கிறது. தேவன் ஜெபமணி கையைப் பிடித்து எழுதும் போது இவ்வசனங்கள் அவரது கண்களுக்குத் தென்படவில்லை போலும்.

19:19 வசனத்தில் ஏசுவைப் பரிசுத்தமான குழந்தை என்று கூறுவதை நாம் மறுக்கவில்லை.

விபச்சாரத்தின் மூலம் பெற்றெடுத்ததாக அன்றைய யூத சமுதாயம் மேரியைக் குற்றம் சாட்டினர். ஏசு அது போல் தவறான முறையில் பிறந்தவர் அல்லர். பரிசுத்தமான முறையிலேயே பிறந்தவர் என்று முஸ்லிம்கள் நம்ப வேண்டுமெண்பதற்காக இவ்வசனத்தைக் கூறுகிறான்.

விபச்சாரத்தின் மூலம் பிறவாத அனைத்துக் குழந்தைகளும் பரிசுத்தமான குழந்தைகளே. ஏசுவும் பரிசுத்தமான முறையில் பிறந்தவரே என்பதை முஸ்லிம்கள் மறுக்கவில்லை. இதனால் பரிசுத்தமான முறையில் பிறந்தவர்களெல்லாம் தேவனுக்குப் பிள்ளைகளாகி விட முடியுமா? ஜெபமணியின் தெளிவு இப்படிப் போய்க்கொண்டிருக்கிறது.

அடுத்து அவர் கூறக் கூடிய 3:37. 39 வசனங்கள் கூறுவதென்ன வென்பதையும் காண்போம்.

அவளை (மேரியை) அவளுடைய இறைவன் அழகிய முறையில் ஏற்று கொண்டான். அவளை அழகிய முறையில் வளந்திடச் செய்தான். அவளை வளர்க்கும் பொறுப்பை ஜக்கரியா ஏற்றுக் கொள்ளுமாறு செய்தான் (3:37)

இந்த வசனத்தில் அவளை மனவியாக இறைவன் ஏற்றுக் கொண்டதாக ஜெபமணி புரிந்திருக்கிறார் இதனாலேயே இப்னுல்லாஹ் என்று ஏசுவை இவ்வசனம் கூறுவதாக வாதிடுகிறார்.

அதற்கு முன்னுள்ள இரன்டு வசனங்களையும், இந்த வசனத்தையும் ஒழுங்காக அல்லது மேலோட்டமாக பார்த்தாலே ஜெபமணியின் முட்டாள்தனம் வெட்ட வெளிச்சமாகும்.

இம்ரானுடைய மனைவி (அதாவது மேரியின் தாய்) கர்ப்பமாக இருந்த போது தன் கர்ப்பத்தில் உருவான குழந்தையை இறைவனுக்காக நேர்ச்சை செய்கிறார்
.

இவ்வாறு நேர்ச்சை செய்யும் போது கர்ப்பத்தில் வளர்வது ஆண் குழந்தையா? பெண் குழந்தையா? என்பது அவருக்குத் தெரியவில்லை. அது மட்டுமல்ல அது ஆண் குழந்தையாக இருக்கும் என்றே எதிர்பார்க்கிறார். இதனாலயே பெண்ணாகப் பிறந்ததும் பெண்ணைப் பெற்று விட்டேனே என்று கூறுகிறார். இந்த விபரங்கள் அவர் எடுத்துக் காட்டிய வசனங்களின் முன்னுள்ள இரு வசனங்களில் கூறப்படுபவையாகும்.

அதாவது தன் கர்ப்பத்தில் ஆண் குழந்தை வளர்வதாக எண்ணிக் கொண்டு அக்குழந்தையை இறைவனுக்காக நேர்ச்சை செய்து அதை ஏற்குமாறு கேட்கிறார். அவர் நேர்ச்சை செய்ததை அல்லாஹ் ஏற்றுக் கொண்டதாக இறைவன் கூறுகிறான். இந்த வசனத்தின் மூலம் இறைவனின் மனைவி என்று மேரியைக் குர்ஆன் கூறுவதாக ஜெபமணி வாதிடுகிறார்.

இந்த வசனத்தில் உள்ள அபத்தம் எவருக்கும் புரியுமென்றாலும் ஜெபமணிகளுக்கு புரிய வைப்பதற்காக அதை நாம் விளக்குவோம்.

மேரியின் தாயார் தன் வயிற்றில் வளரும் குழந்தை ஆண் என்று எண்ணிக் கொண்டு அதை இறைவனுக்காக நேர்ச்சை செய்வதாக கூறினார். குழந்தையை இறைவனுக்கு நேர்ச்சை செய்வதென்றால் அதற்கு என்ன பொருள்?

இறைவனுக்கு மனைவியாக ஆக்குவது என்பது தான் பொருளா? அப்படியானால் தன் கருவில் வளர்வது ஆண் குழந்தை என்று எண்ணிக் கொண்டு அல்லவா அவர் நேர்ச்சை செய்கிறார். ஆண் குழந்தையை மனைவியாக்க முடியுமா? தன் குழந்தையை இறைவனுக்காக நேர்ச்சை செய்வதென்றால் அதை இறைவனுடைய மார்க்கத்தை நிலை நாட்டும் பணிக்கு அர்ப்பணிப்பது என்பதே பொருள்.

இந்தப் பணிக்கு ஆணே ஏற்றவன் என்று கருதியே அவ்வாறு நேர்ச்சை செய்கிறார். பிறந்தது பெண் குழந்தை ஆனாலும் அப்பெண்ணின் நேர்ச்சை அடிப்படையில் மார்க்கச் சேவைக்காக இறைவன் மேரியை ஏற்றுக் கொண்டதாக கூறுகிறான்.

மேலும் அவ்வசனத்திற்கு மனைவியாக ஏற்றான் என்று பொருள் கூறும் ஜெபமணி, அதே வசனத்திலேயே குழந்தை மேரியைப் பற்றித் தான் கூறப்படுகிறது என்பதைக் கவனிக்கவில்லை. கபருவப் பெண் மேரியைப் பற்றிக் கூறப்படவில்லை என்பதையும் சிந்திக்கவில்லை.

இறைவன் மனைவியையும் மகனையும் ஏற்படுத்திக் கொள்ளவில்லை என்று 6:101.72:33. 112:3 வசனங்களில் இறைவன் தெளிவாகக் கூறுவதையாவது ஜெபமணி கவனிக்க வேண்டாமா?

அடுத்து 3:39 வசனத்தையும் தன் கருத்துக்குச் சான்றாக எடுத்து வைக்கிறார் ஜெபமணி.

ஜக்கரியாவுக்கு யஹ்யா என்ற குமாரர் பிறக்கவிருப்பது பற்றி அவ்வசனம் கூறுகிறது. மேலும் ஏசுவை இறைவாக்கு என்று அல்குர்ஆன் கூறுவது போலவே அவ்வசனத்தில் யஹ்யாவையும் இறைவாக்கு என்று கூறுகிறது.

ஜெபமணி கூறும் கருத்துக்கு இதில் என்ன சான்று இருக்கிறது. மாறாக ஜெபமணிக்கு எதிரான கருத்தே இவ்வசனத்தில் இருக்கிறது.

ஏசுவை இறைவனின் வாக்கு (கலிமத்துல்லாஹ்) என்று இறைவன் கூறுகிறான் அல்லவா? அதே வார்த்தையை யஹ்யா என்பவருக்கும் பயன்படுத்தியதன் மூலமும் எல்லா மாந்தருமே கலிமத்துல்லாஹ் தான்; இறைவனின் வாக்கால் உத்திரவால் உருவாக்கப்பட்டவர்கள் தான் என்று அவ்வசனம் கூறி கிருத்தவக் கோட்பாடுகளைத் தகர்க்கிறது. இதையும் அவர் இறை மகன் கோட்பாட்டுக்குச் சான்றாக்குவது விந்தையிலும் விந்தையே.

விமர்சனம் 11

கிபி 8 வது நூற்றாண்டில் அரபு மொழி இலக்கிய நடைக்குக் கொண்டு வரப்பட்டது என்று அரபு சரித்திரம் கூறுகிறது. அதன் பின்னரே குர்ரானும் ஹதீஸும் இலக்கிய வடிவில் எழுதப்பட்டதாக இஸ்லாமிய சரித்திரங்கள் கூறுகிறது. அதாவது முஹம்மதுவின் காலத்தில் அரபு பேச்சு மொழியாக மாத்திரமே இருந்தது. எழுத்து இலக்கியங்கள் இருக்கவில்லை. முகம்மதுவின் சீடர்கள் உம்மிகள். முகமதுவிடம் மனனமாக அறிந்தவற்றையே கிபி 8 வது நூற்றாண்டில் அரபு மொழியில் எழுதப்பட்டது. உம்மிகள் சொன்ன யாவுமே சரியானவை அல்ல என்பதை என் கையில் உள்ள குர்ரான் புத்தகத்தின் பக்கம் 13 ஆசிரியர் விவரித்துள்ளார் என்று ஜெபமணி கூறுகிறார். (பக்கம் 30)

நல்ல ஆராய்ச்சி தான் போங்கள்! ஒரு எழவும் தெரியாதவன் என்று கிராமப்புறத்தில் குறிப்பிடுவார்கள் அல்லவா அதற்குரிய முழுத் தகுதியையும் இதில் ஜெபமணி பெற்றிருக்கிறார்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் காலத்திலேயே குர்ஆன் உடனுக்குடன் எழுதி வைக்கப்பட்டது. அவற்றை எழுதுவதெற்கென்றே வஹியை எழுதக் கூடிய எழுத்தர்கள் பலர் இருந்தனர் என்பதை புகாரி உட்பட பல நூல்கள் கூறுகின்றன.

குர்ஆனைத் தவிர வேறெதனையும் (குர்ஆனுடன் சேர்த்து) எழுத வேண்டாம் என்று நபிகள் (ஸல்) வலியுறுத்தி குர்ஆன் எழுதப்பட வேண்டுமென நபிகளே ஏற்பாடு செய்தது முஸ்லிம் என்ற ஹதீஸ் நூலில் இடம் பெற்றுள்ளது.

இப்னு உமர் (ரலி) என்ற நபித்தோழர் ஹதீஸ்களை எழுதி வைத்துக் கொள்வார் என்று அபுஹீரைரா (ரலி) என்ற நபித்தோழர் அறிவிக்கும் செய்தி புகாரியில் இடம் பெற்றுள்ளது.

நபிகளின் ஒரு போதனையை எழுதித் தருமாறு அபூ ஷாஹ் என்பவர் நபிகளிடம் கேட்ட போது இதை அபூஷாவுக்கு எழுதிக் கொடுங்கள் என்று நபிகள் உத்தரவிட்டது புகாரியில் இடம் பெற்றுள்ளது.

பலரும் தனித்தனியாக குர்ஆனை எழுதி வைத்திருந்தனர். நபிகள் மரணமடைந்த உடனேயே அவர்களின் மிக உற்ற தோழரும் இஸ்லாத்தின் முதல் கலீபாவான அபூபக்ரு (ரலி) ஒன்று திரட்டிய செய்தி புகாரி உட்பட எல்லா ஹதீஸ் நூல்களிலும் இடம் பெற்றுள்ளது.

உஸ்மான் (ரலி) என்ற மூன்றாவது கலீபா அவர்கள் அந்தப் பிரதியைப் பல பிரதிகளாக்கி அந்தப் பிரதியில் ஒன்று இன்றளவும் இஸ்தான்பூல் (துருக்கி) நூலகத்தில் பாதுகாக்கப்பட்டு வருகிறது.

மேலும் நபிகள் வாழ்ந்த காலத்திலேயே பல்வேறு நாட்டு மன்னர்களுக்கு நபியவர்களால் இஸ்லாம் பற்றி அறிமுகம் செய்யும் கடிதங்கள் அனுப்பப்பட்ட நிகழ்ச்சிகள் புகாரி உட்பட எல்லா ஹதீஸ் நூல்களிலும் இடம் பெற்றுள்ளது.

நபிகள் காலத்தில் மக்கத்துக் காஃபிர்களுடன் ஹுதைபியா உடன்படிக்கை எழுதப்பட்டது. இந்த விபரம் இடம் பெறாத ஹதீஸ் நூலே இல்லை எனலாம்.

இஸ்லாமிய வரலாறு இவ்வளளவு தெளிவாக இருக்க ஞான சூன்யம் ஜெபமணிக்கு இது தெரியாமலிருப்பதில் ஆச்சரியம் எதுவுமில்லை.

ஏனெனில் ஆண்டவராலேயெல்லாமல் எந்த ஒரு மனிதரிடமும் வேத பண்டிதரிடமும் அவர்கள் எழுதிய நூல்களிருந்து ஒன்றையும் நான் கேட்டோ வாசித்தோ அறியவில்லை என்பதற்கு தேவன் மாத்திரமே சாட்சி என்று முன்னுறையில் ஜெபமணி குறிப்பிடுகிறார்.

ஐயா ஞான சூன்யமே தேவனுடன் சேர்ந்து நாங்களும் நீர் ஒன்றையுமே வாசித்தோ கேட்டோ அறியவில்லை என்பதற்குச் சாட்சிகளாக இருக்கிறோம். எதையும் வாசித்தறியாமல் விட்டு அடிப்பவர் என்று தன்னைப் பற்றி கூறிக் கொள்பவரிடம் வேறு எதை எதிர்பார்க்க முடியும்?

இலக்கண இலக்கியங்கள் கற்ற பல கவிஞர்கள் நபிகளின் காலத்திலும் அதற்கு முன்னரும் வாழ்ந்திருக்கின்றதை அரபி வரலாறு தெளிவாகக் கூறுகிறது. இம்ரவுல்கைஸ், முதனப்பீ போன்ற கவிஞர்களையும் ஹஸ்ஸான், கஃபு போன்ற நபித்தோழர்களான கவிஞர்களையும் உதாரணமாகக் கூறலாம்.

நாம் அவரை பிலிப் கே ஹிட்டி, ரேன்ல்ட் நிக்கல்ஸன், புரோக்கல் மேன் போன்றார் எழுதிய அரபு வரலாறு அரபு இலக்கிய வரலாறு போன்ற நுல்களையும் படிக்குமாறு சிபாரிசு செய்கிறோம். அந்த நூற்கள் ஆங்கிலத்தில் உள்ளன. ஆங்கிலம் தெரிந்த யார் துனையுடனாவது அவற்றைப் படித்தபின் ஜெபமணி இது போன்ற அபத்தங்களை எழுதத் துணிய மாட்டார் என நம்புகிறோம்.

முஹம்மது (ஸல்) அவர்களின் சமுதாயம் உம்மிகள் எனக் கூறப்பட்டது பெரும்பான்மையோரைக் கருத்தில் கொண்டு கூறப்பட்டதாகும். அவர்களில் எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள் கனிசமான அளவுக்கு இருந்தனர் என்பது மறுக்க முடியாத உண்மையாகும்.

குர்ஆன் இறை வேதமல்ல அல்லது நபி காலத்திலேயே தொகுக்கப்படவில்லை என்று கூறி பொய்யான ஆதாரமற்ற தகவலைக் கூறியவர் இந்தக் குற்றச்சாட்டுக்குரிய பைபிளைப் பற்றி சிறிது எண்ணிப் பார்க்க வேண்டாமா?

குர்ஆனுக்கும் முந்தைய காலத்தில் எழுதப் படிக்கத் தெரியாதவர்கள் தான் அதிகம் இருந்திருப்பார்கள் என்பதும் உண்மை. ஏசுவின் காலத்தில் பைபிள் தொகுக்கப்படவில்லை என்பதும் உண்மை.

இதனால் மூஸாவுக்கு அருளப்பட்ட பழைய ஏற்பாட்டில் மூஸாவின் மரணம் பற்றிக் கூறப்படுகிறது.

மிகப் பழங்காலத்தில் தான் மனிதக் கற்பனைகள் கலந்து எழுதப்பட்டது. மூல மொழியும் செத்துப்போய் பல நூறு ஆண்டுகளாகி விட்டன (இன்னும் பைபிளின் கதை அடுத்த விமர்சனத்தில் விரிவாகத் தரப்பட்டுள்ளது) இந்த இலட்சனத்தில் நபிகள் காலத்திலேயே பாதுகாக்கப்பட்ட குர்ஆனைப் பற்றி தெளிவடைய வந்து விட்டார் ஜெபமணி

இதில் பெரிய தாமஷ் என்னவென்றால் இதே ஜெபமணி இதே நூலின் பக்கம் 62ல் கூறுவது தான் முஹம்மது குர்ஆன் (3:50 56)ல் ஏசுவை நிராகரியாது

அவரைப் பின்பற்றும் படி குர்ரானில் எழுதி வைத்திருக்கிறார் என்கிறார் ஜேபமணி

எழுதத் தெரியாத காலத்தில் எப்படி எழுதி வைத்தார் என்று கேட்டு விடாதீர்கள்.

30ம் பக்கத்தில் கூறுவதை 62ம் பக்கத்தில் அவரே மறுத்துக் கெள்கிறார்.

முகம்மது குர்ஆனை எழுதினார் என்று கூறியவர் மற்றோரிடத்தில் 6:7 ல் கடிதத்தில் எழுதப்பட்டதையே தேவன் முகமதுவுக்குக் கொடுத்து அதை அவர்கள் தொட்டு பார்த்திருந்தும் நிராகரித்தனர் என்றும் கூறப்படுகிறது (பக்கம் 69) என்கிறார்.

6;7 வசனம் என்ன கூறிகிறது என்பதை முன்பே விளக்கி விட்டோம். இங்கே கவனிக்க வேண்டியது என்னவென்றால் முகமதுவுக்கு கடிதமாக இறைவன் எழுதிக் கொடுத்தான் என்று ஜெபமணி.

கூறுவதைத் தான். எழுதத் தெரியாத முஹம்மதும் அவர் சமுதயமும் இறைவன் எழுதிய கடிதத்தை எப்படிப் படித்திருக்க முடியும்.

முரண்பாடே உனக்கு மறு பெயர் ஜெபமணியா?

விமர்சனம் 12

மேற்படி நூலுல் பக்கம் 32. 33லும் 36. 37 லும் 38. 39 லும் ஜெபமணியின் உளறல்கள் உச்சகட்டமான உளறல்களாக உள்ளன. அந்த இடங்களில் அவர் கூறுவதை அப்படியே தந்து விட்டு விரிவாக அவற்றை அலசுவோம்.
இசுலாத்தின் மதநூலான குர்ரானில் வர்காபின் முகம்மதுவுக்குப் போதித்த யூத கிறிஸ்துவ வேதத்திலிருந்து அறுபது சதிவீதமான வசனங்களையும் கத்தோலிக்க விக்கிரக வணக்கத்தாரிடமிருந்து இருபத்தைந்து சதவீதமான வசனங்களையும் மீதமானவைகள் முகமது பேசிய நிர்வகித்தவற்றிலிருந்தும் தொகுத்து குர்ரானை அமைத்துள்ளார் என்பதை நாம் தெளிவாகக் காண்கிறோம். ஆனால் முகமதுவுக்கு வானத்திலிருந்து குர்ரான் இறக்கப்பட்டது என்று மிகைப்படக் கூறி முஸ்லிம்களை ஏமாற்றுகின்றனர்.

வேதம் ஆவியால் மனித உள்ளத்தில் உணர்த்தப்பட்டு அவர்களின் அவர்களின் சுய மொழியில் எழுதப்பட்டதே. மேலே நாம் கூறியுள்ள படி குர்ரானில் கொள்கைகளையும் முகமதுவின் சரீர சுத்திகரித்தல் நம்பிக்கை தொழுகை விதிகள் முகமதுவின் சில ஆலோசனைகளும் நீங்கலாக மற்ற அனைத்தும் சத்திய வேதத்திலிருந்து நாசுக்காக எடுத்தெழுதப்பட்டுள்ளதை எழுத்தறிவும் கண்பார்வை உள்ளவர்களும் குர்ரானில் கண்டு கொள்ளக்கூடிய உண்மையாயிருக்கிறது. அதை இங்கே கொஞ்சம் ஆராய்வோம். யூத வேத புருடர்களைக் கொண்டு மேசே காலம் முதல் எழுதப்பட்ட வேதம் பகுதிகளிலிருந்து எடுத்து எழுதப்பட்ட குர்ரானில் ஆங்காங்கு சரித்திரக் குறிப்புகளை மட்டுமே காண்கிறோம். ஆனால் அதன் முழு அடிப்படையை ஆத்மீக விபரத்தை குர்ரானில் காண முடியவில்லை. குர்ரானில் காணப்படும் குறிப்புகளின் முழு விளக்கத்தை பைபிளில் தான் காண முடியும் என்கிறார் ஜெபமணி. (பக்கம் 31. 31)

வேத வசனங்கள் யாவும் தேவ ஆவியானவரால் தேவதாசர்கள் உள்ளத்தில் ஏவப்பட்டு அவர்கள் பேசும் மொழியில் எழுதப்பட்டுள்ளது. இச்செயலை முஸ்லிம்கள் முகமதுவுக்கு அரபு மொழியில் (பொட்டலம் கட்டி) வானிலிருந்து இறங்கியதாக அறிவுக்கு பொருத்தமற்று மிகைபடக் கூறுகிறார்கள். முகமதுவுக்கு முன் வேதத்தை வர்காபின் போதித்தார். ஆஜ்மி மொழியில் தான் கேட்டவற்றை

தமது சகாக்களுக்கு முகமது அரபு மொழயியல் சொன்னார் என்பதே சரியான கருத்து. இதன் உண்மை விபரத்தை அறியாத முஸ்லிம்கள் (திருமண நாளில் மணமகனையும் சவக்கிடங்கண்டை செத்தவனையும் மிகைப்படப் புகழ்வது போல் புழுகி) குர்ஆனைக் குறித்தும் மிகைப்படவும் நம்புகின்றனர். அல்லது நம்பப் பண்ணுகின்றனர் என்பதே உண்மை. ஏனெனில் ஏனெனில் பைபிளில் இல்லாத புதிய காரியம் எந்த ஒன்றையும் முகமது முஸ்லிம்களுக்கு சொல்லிவிடவில்லை என்கிறார் ஜெபமணி (பக்கம் 38. 37)

கி பி 628 வரையிலும் முயன்றும் முகமதுவால் இசுலாத்தை ஒரு மதமாக்க முடியவில்லை. இசுலாத்தை மதமாக்கும்படி முகமது கிறித்துவ அஸ்திபாரங்களையே 60 சதவிகிதம் புகுத்தியுள்ளார்.

யூத சரித்திரமின்றி இசுலாத்தை ஒரு மதமாக மெருகூட்ட முடியாமல் யூத சரித்திர பாரம்பரியங்களையும் 30 சதவிகிதம் இசுலாத்தில் புகுத்தினார். மீதான விபரங்களை தம் சகாக்களின் கேள்விகளுக்குத் தந்த பதிலிலும் ஆட்சி நிர்வாகத்திற்காய் முகமதுவால் தரப்பட்ட ஆலோசனைகளுமாகக் சேர்த்துக் குர்ரான் அமைக்கப்பட்டது. கிபி 8ம் நூற்றாண்டில் இசுலாமிய ஆளுநர்களால் அரபு இலக்கியத்திற்கேற்ப குர்ரான் திருத்தி எழுதப்பட்டது என்பதே சரித்திரம் என்கிறார் ஜெபமணி (பக்கம் 38. 39)

நமது பதில்

இந்த மூன்று பாராக்களிலும் அவர் கூறக் கூடிய மையக் கருத்து குர்ஆன் பைபிளிலிருந்து எடுத்தெழுதப்பட்டது என்பதே. இதை மிகவும் விரிவாகவும் தெளிவாகவும் நாம் விளக்கம் அளிக்கக் கடமைப்பட்டுள்ளோம். அந்த மையக் கருத்துக்குச் செல்வதற்கு முன்னால் இந்த மூன்று பாராக்களிலும் உள்ள முரண்பாடுகளையும் பொய்களையும் காண்போம்.

பைபிளிலிருந்து எழுதப்பட்டதே குர்ஆன் என்று வாதிடும் ஜெபமணி முகமதுவுக்கு வானத்திலிருந்து குர்ரான் இறக்கப்பட்டது என்று மிகைபடக் கூறி முஸ்லிம்கள் ஏமாற்றுகின்றனர். வேதம் தேவ ஆவியால் மனித உள்ளத்தில் உணர்த்தப்பட்டு அவர்கள் சுய மொழியில் எழுதப்பட்டதே என்றும் கூறுகிறார்.

அதாவது வானத்திலிருந்து குர்ரான் இறக்கப்பட்டதாகக் கூறுவது மிகைபடக் கூறலாம்.

மனித உள்ளத்தில் தேவனால் உணர்த்தப்பட்டதே வேதமாம். இதன் மூலம் வானத்திலி ருந்து இறக்கப்பட்டதைத் தான் மறுக்கிறார். தேவனால் முகமதுவின் உள்ளத்தில் உணர்த்தப்பட்டது என்பதை ஒப்புக் கொள்கிறார். அவரது வாதப்படி முஹம்மது (ஸல்) அவர்களுக்கு உள்ளத்தில் உணர்த்தப்பட்டதே குர்ரான் என்பதை ஒப்புக் கொண்டாலும் அவர் வாதமே பைபிளிலிருந்து எழுதப்பட்டது என்பது தானே. அவரது அந்த முந்தைய வாதத்தை மறுக்கின்றதே என்னே தெளிவு.

முஹம்மது (ஸல்) அவர்களுக்கு வஹி வந்த துவக்க காலத்திலேயே வரக்கா இறந்து விட்டார் என்பதை முன்னர் விளக்கியுள்ளோம் . ஜெபமணியின் வாதத்தை ஏற்றுக் கொண்டு பார்த்தாலும் முகமதுவுக்கு உள்ளத்தில் உணர்த்தப்பட்டதே வேதம் என்ற முந்தைய கூற்றுடன் வரக்காவிடம் வேதத்தைக் கற்றார் என்ற இந்தக் கூற்றுக்கு முரண்படுகிறது.

பைபிளில் இல்லாத புதிய காரியம் எந்த ஒன்றையும் முகமது முஸ்லிம்களுக்குச் சொல்லிவிடவில்லை என்று ஒரு இடத்தில் கூறும் ஜெபமணி மற்றொரு இடத்தில் யூத கிறிஸ்துவர்களிடமிருந்து 60 சதவிகிதமானவற்றையும் கத்தோக்கரர்களிடமிருந்து இருபத்தைந்து சதிவீதத்தையும் மீதியைப் புதிதாகவும் சேர்த்துச் சொன்னதாகக் குறிப்பிடுகிறார். இந்த சதிவீதம் கூட மற்றோர் இடத்தில் 90 சதவீதமாகப் போகின்றது.

இனி ஜெபமணியின் பிரதானமான குற்றச்சாட்டுக்கு வருவோம். பைபிளிலிருந்து குர்ஆன் எடுத்தெழுதப்பட்டதாக ஜெபமணி கூறுகிறார் அல்லவா? அவ்வாறு அவர் கூறுவதற்கு காரணம் என்னவென்பதை முதலில் காண்போம்.

ஆதம், நூஹ், இப்றாகிம், இஸ்மாயீல், இஸ்ஹாக், யஃகூப், யூசுப், தாவூத், சுலைமான், ஜக்கரிய்யா, யஹ்யா, ஈஸா, ஹாரூன், ஈஸா, லூத் ஆகிய

தீர்க்கதரிசிகளைப் பற்றி குர்ஆன் கூறுகிறது. இவர்களைப் பற்றி பைபிளும் கூறுகிறது. குர்ஆனை விட பைபிள் முந்தியது என்பதால் பைபிளிலிருந்து எடுத்தெழுதப்பட்டது குர்ஆன் என அவர் புரிந்திருப்பதாலேயே இவ்வாறு கூறுகிறார். மேலோட்டமாகப் பார்க்கும் போது இதில் நியயாம் இருப்பது போல் சிலருக்குத் தோன்றலாம்.

ஆனால் சிந்தனையுடையோர் இந்த வாதத்தில் எந்த சாரமும் இல்லை என்பதை உணரலாம்.

இறைக் கோட்பாடு சட்ட திட்டங்கள் கொள்கைகள் வழிகாட்டும் நெறிகள் ஏவல்கள் விலக்கல்கள் வணக்கமுறைகள் ஆகியவற்றின் அடிப்படையிலே மதங்கள் வேறுபடுகின்றன. இவை தான் மதங்களுக்கு அஸ்திவாரங்கள்.

மேலே கூறப்பட்ட யாவற்றிலுமே கிறிஸ்துவத்திலிருந்தும் யூத மதத்தி லிருந்தும் இஸ்லாம் நூற்றுக்கு நூறு வேறுபட்டு இருக்கின்றது. மாறுபட்டு நின்று கிறிஸ்துவக் கோட்பாட்டை ஆணித்தரமாகவும் மறுக்கின்றது. கிறிஸ்துவ அஸ்திபாரங்களையே 60 சதவிகிதம் புகுத்துள்ளார் முகம்மது என்ற ஜெபமணியின் கூற்று சரிதானா என்று அவரே சிந்திக்கட்டும்.

மனிதன் பாவியாகப் பிறக்கிறான் அவனது பாவத்தைச் சுமப்பதற்காக சிலுவையில் ஏசு தன்னைப் பலி கொடுத்தார் என்ற கிறிஸ்துவ அஸ்திவாரமும் மனிதன் நல்லவனாகவே பிறக்கின்றான் ஒருவரது பாவத்தை மற்றவர் சுமக்க முடியாது என்ற குர்ஆனின் கோட்பாடும் ஒன்றா?

ஆதாமும், ஏவாளும் செய்த தவறுகளினால் அவரது சந்ததிகளும் பாவிகளே என்று கூறக் கூடிய கிறிஸ்துவக் கோட்பாடும் தந்தையின் பாவத்தை மகன் சுமக்க மாட்டார் என்ற குர்ஆனின் கோட்பாடும் ஒன்றா?.

கடவுளுக்கு ஒரு மகன் உண்டு. அந்த மகனுக்கு தாய் உண்டு என்ற கிறிஸ்துவ கோட்பாடும் கடவுளுக்கு மனைவி மக்கள் இல்லை என்ற குர்ஆனின் கோட்பாடும் ஒன்றா?

ஏசு தான் மறுமையில் அனைவரையும் காப்பாற்றுவார் என்ற கிறிஸ்துவக் கோட்பாடும் இயேசுவையும் இறைவன் விசாரிப்பான் என்று கூறக்கூடிய குர்ஆனின் கோட்பாடும் ஒன்றா?

இப்படி ஆயிரமாயிரம் அடிப்படைக் கோட்பாடுகளில் கிறிஸ்துவத்திற்கும் இஸ்லாத்திற்குமிடையே வேறுபாடுகள் உள்ளன. இவரோ கிறிஸ்துவ அஸ்திபாரங்களிலிருந்து தான் குர்ஆன் எழுதப்பட்டது என்கிறார்.

அப்படியானால் பைபிளில் கூறப்படும் தீர்க்கதரிசிகளைப் பற்றி இஸ்லாமும் கூறுகிறதே என்ற கேள்விக்கு என்ன பதில்?

அந்தத் தீர்க்கதரிசிகளைப் பற்றி பைபளும் குர்ஆனும் கூறுவது உண்மையே. ஆனால் பைபிள் கூறுவதற்கும் குர்ஆன் கூறுவதற்குமிடையே பல வித்தியாசங்கள் உள்ளன. பைபிள் அவர்கள் பற்றிக் கூறப்படும் பல விஷயங்களை குர்ஆன் பொய் எனக் கூறுகிறது. (விபரம் கீழே வருகிறது)

பைபிள் அவர்களின் பிறப்பு இறப்பு மற்றும் (சரித்திரம் என்ற பெயரில்) அங்கே போனார்; இங்கே போனார்; அவரைச் சந்தித்தார்; இவரைச் சந்தித்தார்; அவர்களுடன் சல்லாபித்தார்; இவர்களுடன் சல்லாபித்தார்; இவனைக் கொன்றார்: கூழ் சாப்பிட்டார்; கறி சாப்பிட்டார் என்று வளவளவென்று பேசும்.

குர்ஆன் எவரைப் பற்றியும் இப்படியெல்லாம் சொல்வது இல்லை. ஏனெனில் அவர்கள் கூழ் சாப்பிட்டதாலோ அல்லது கறி சாப்பிட்டதாலோ யாருக்கும் எந்தப் பயனும் இல்லை. அதில் எந்தப் போதனையும் இல்லை.

உண்மையை அதாவது ஓரிரைக் கொள்கையை அவர்கள் எடுத்துச் சொன்ன போது அந்தத் தீர்க்கதரிசிகள் பட்ட கஷ்டம், அதைத் தாங்கிக் கொண்டு துணிந்து அவர்கள் நடத்திய போராட்டம், அவர்களது போதனை ஆகியவற்றை மட்டும் குர்ஆன் கூறும்.

இவ்வாறு அவர்களிடம் கூறிவிட்டு படிப்பினை உள்ளது என்றும் சேர்த்துக் கூறுகிறது குர்ஆன். இவற்றைக் கூறுவதால் கொள்கையில் மக்கள் உறுதியடைய முடியும். துணிவு ஏற்படும். தெளிவு ஏற்படும். காலையில்

வெள்ளைச் சட்டை போட்டார்; கறுப்புச் சட்டை போட்டார் என்றும், ஜெபமணிக்கு ஆரோக்கிய சாமி பிறந்தார் என்றும் இப்படியே நூறு பட்டியல் போடுவதால் யாருக்கு என்ன நன்மை?

பைபிள் இதைத் தானே சொல்கிறது? இதைத் தான் கூடுதல் விபரமென்கிறார் ஜெபமணி. இந்தக் கூடுதல் விபரங்களால் யாருக்கு என்ன நன்மை? என்ன படிப்பினை? மனிதனுக்கு வழிகாட்ட அருளப்பட்ட குர்ஆனில் இதையெல்லாம் ஜெபமணி எதிர்பார்க்கிறார்.

அவருக்கு கதை வேண்டுமானால் சாண்டில்யன் நாவலையோ அல்லது பைபிளையோ படித்துக் கொள்ள வேண்டுமேயன்றி உண்மையான வேதத்தில் கதைகளை எதிர்பார்த்தால் ..?

கடந்த காலத்தில் வாழ்ந்தவர்களைப் பற்றிக் கூறுவதைக் காப்பியடிப்பது என்று எந்த அறிவாளியும் கூற மாட்டான்.

நியூட்டனைப் பற்றியோ, புத்தரைப் பற்றியோ, பவுலைப் பற்றியோ, ஐன்ஸ்டினைப் பற்றியோ, கார்ல் மார்க்ஸ் பற்றியோ ஜெபமணி எதையாவது எழுதினால் பேசினால் அவர் முன்னுள்ளவர்களிடமிருந்து காப்பியடித்தார் என்று சொல்ல முடியுமா? முன்னால் யாரேனும் இவர்களைப் பற்றி எழுதி விட்டால் அதை எழுதும் உரிமை யாருக்கும் இல்லை என்பாரா ஜெபமணி?

அல்லது கார்ல் மார்க்ஸ் பற்றி பலர் எழுதி விட்டதால் காப்பி அடிக்கக் கூடாது என்பதற்காக காரல் மார்க்ஸ் என்பதை கூறல் மூக்ஸ் என்று கூற வேண்டுமென்கிறாரா ஜெபமணி?

அப்படியானால் பைபிளில் கிறிஸ்துவ மார்க்கத்திற்கு முன் வாழ்ந்த ஆதாம், நோவா, ஆப்ரஹாம் பற்றிக் கூறப்படுவதும் காப்பியடித்தல் என்கிறாரா?

கடந்த கால சரித்திரங்ளைப் பொருத்தவரை காப்பியடித்தல் என்பது எப்போது வரும்?யாரேனும் எழுதியதை வரிக்கு வரி வார்த்தைக்கு வார்த்தை மற்றவர் எழுதி அதைத் தன்னுடையது என்று கூறினால் அதைக் காப்பி எனலாம்.

பைபிள் கூறுவது போல் குர்ஆன் கூறவில்லை. அதற்குக் மாற்றமாகக் கூறுகிறது என்றால் அது எப்படி காப்பியடித்தலாகும்? சிந்திப்பாரா ஜெபமணி?.

உதாரணமாக இந்திரா காந்தியைப் பற்றி ஒருவர் எழுதிய நூலில் அவரை நேர்மையாளர் என்று எழுதப்பட்டதாக வைத்துக் கொள்வோம். அதற்குப் பின் மற்றொருவர் எழுதிய நூலில் இந்திராவை நேர்மையற்றவர் என்று எழுதியாக வைத்துக் கொள்வோம்.

பின்னவர் முன்னவரிடமிருந்து காப்பியடித்தாகக் கூற முடியுமா? கூறுபவன் புத்திசாலியாக இருக்க முடியுமா? இந்திராவைப் பற்றி இரண்டு விமர்சனங்களுக்கும் எவ்வளவு வித்தியாசங்களோ அவ்வளவு வித்தியாசம் குர்ஆன் கூறுவதற்கும் பைபிள் கூறுவதற்கும் இடையே உள்ளன.

ஆதம் பெண்ணால் தான் கெட்டார் என்று கூறி ஆண் வர்க்கத்தைப் பரிசுத்தப்படுத்த முயல்கிறது பைபிள். இருவரும் சேர்ந்தே அந்தத் தவறைச் செய்தார்கள் என்று இருவரையும் சமநிலையில் நிறுத்துகிறது குர்ஆன்.

ஏவாளை தவறிழைக்கச் செய்தது நல்ல பாம்பு என்கிறது பைபிள். பகுத்தறிவு இல்லாத பாம்பு பல்லி எல்லாம் பகுத்தறிவுள்ள மனிதனைக் கெடுக்க முடியாது என்பதால் ஆதாம் ஏவாள் இருவரையுமே பாவத்திற்கு பொறுப்பாளியாக்குகிறது குர்ஆன்.

ஆதாமும், ஏவாளும் செய்த பாவத்திற்கு மன்னிப்பு இல்லை. எல்லாப் பாவங்களையும் ஏசு சுமந்து கொள்கிறார் என்கிறது பைபிள். அவ்விருவரும் செய்த தவறை அவர்கள் உணர்ந்து மன்னிப்புக் கேட்டதாகவும் அதன் பின் இறைவன் அவர்களை மன்னித்ததாகவும் குர்ஆன் கூறுகிறது.

மூஸா (அலை) அவர்களைப் பற்றி பைபிள் கூறும் போது மேலும் கர்த்தர் அவனை நோக்கி உன் கையை உன் மடியிலே போடு என்றார். அவன் தன் கையை தன் மடியிலே போட்டு வெளியே எடுக்கும் போது இதோ அவன் கை உறைந்த மழையைப் போல் வெண் குஷ்டம் பிடித்திருந்தது.

(யாத்திராகமம் 4:6)

ஆனால் திருக்குர்ஆனோ பளீரென அவரது கை பிரகாசித்ததாகக் கூறுகிறது. அதாவது திருக்குர்ஆன் அதை ஓர் அற்புதமாக சொல்லிக் காட்டுகிறது. பைபிளோ அசிங்கமான நோய் என்கிறது.

பைபிளிலிருந்து காப்பியடிக்கப்பட்டதே குர்ஆன் என்று ஜெபமணயின் கூற்று பொய் என்பதற்கு வேறு சான்று வேண்டுமா என்ன?

சுலைமான் நபியின் பிறப்பு பற்றி பைபிள் கூறுவது என்ன தெரியுமா? ஈசாய், தாவீது ராஜாவைப் பெற்றான். தாவீது ராஜா உரியாவின் மனைவியாயிருந்தவளிடத்தில் சாலமனைப் பெற்றான் என்கிறது பைபிள்

(மத்தேயு 1:6)

அதாவது உரியா என்பவனின் மனைவியுடன் கூடி தாவீது ராஜா சாலமனைப் பெற்றான் என்று கூறுவதன் மூலம் சாலமனை விபச்சாரப் புத்திரன் என்கிறது பைபிள்; அது மட்டுமன்றி தாவீது விபச்சாரம் செய்தார் என்பதையும் கூறுகிறது இதையே மற்றோர் இடத்தில் பைபிள் கூறும் போது

உரியா என்பவனின் மனைவி குளித்துக் கொண்டிருந்த போது தாவீது அவளைப் பார்த்து ஆசை கொண்டு அவளை அழைத்து வரச் செய்து அவளுடன் கூடியதாகவும் அதன் மூலம் அவள் கருவுற்றதாகவும் அதன் பின் உரியாவை தாவீது கொலை செய்ததாகவும் 11 சாமுவேல் பதினொன்றாவது அதிகாரம் 2 முதல் 15 வரையிலும் பைபிள் கூறுகிறது.
ஆனால் திருக்குர்ஆனோ தாவூது (அலை) அவர்களையும், சுலைமான் (அலை) அவர்களையும் இறைவனின் தூதர்களாகவும் நல்லொழுக்கமுள்ளவர்களாகவும் மற்றவர்களுக்கு முன்மாதிரியான சிறந்த வாழ்க்கையை வாழ்ந்ததாகவும் கூறுகிறது.

ஒரினப் புணர்ச்சியைக் கண்டித்து சீர்திருத்துவதற்காகவே இறைவனால் அனுப்பப்பட்ட லூத் நபி பற்றி பைபிள் கூறுவதைக் கேளுங்கள்.

பின்பு லோத்து சோவாரிலே குடியிருக்கப் பயந்து சோவாரை விட்டுப் போய் அவனும் அவனோட கூட அவனுடைய இரண்டு குமாரத்திகளும் மலையிலே

வாசம் பண்ணினார்கள். அங்கே அவனுடைய இரண்டு குமாரத்திகளும் ஒரு கெபியிலே குடியிருந்தார்கள். அப்போது மூத்தவள் இளையவளைப் பார்த்து நம்முடைய தகப்பன் முதிர் வயதானார். பூமியெங்கும் நடக்கிற முறையின் படியே நம்மோட சேரப் பூமியிலே ஒரு புருஷனும் இல்லை.

நம்முடைய தகப்பனால் சந்ததி உண்டாகும் படிக்கு அவருக்கு மதுவைக் குடிக்கக் கொடுப்போம். அவரோடு சயனிப்போம் வா என்றாள். அப்படியே அன்று இரவிலே தங்கள் தகப்பனுக்கு மதுவைக் குடிக்கக் கொடுத்தார்கள் . மூத்தவள் போய் தகப்பனோடே சயனித்தாள். அவள் சயனித்ததையும் எழுந்ததையும் அவன் உணராதிருந்தான்.

மறு நாளிலே மூத்தவள் இளையவளைப் பர்த்து நேற்று ராத்திரி நான் தகப்பனோடே சயனித்தேன். இன்று ராத்திரியும் மதுவைக் குடிக்கக் கொடுப்போம். நம்முடைய தகப்பனால் சந்ததி உண்டாக்கும்படி நீ போய் அவரோட சயனி என்றாள். அப்படியே அன்று ராத்திரியிலும் தங்கள் தகப்பனுக்கு மதுவைக் குடிக்கக் கொடுத்துள்ளார்கள். அப்பொழுது இளையவள் எழுந்து போய் அவனோடே சயனித்தாள். அவள் சயனித்ததையும் எழுந்திருந்ததையும் அவன் உணராதிருந்தான். இவ்விதமாய் லோத்தின் குமாரத்திகள் இருவரும் தங்கள் தகப்பனாரேயே காப்பவதியானார்கள் இப்படிக் கூறுகிறது பைபிள்

(பார்க்க ஆதியாகமம் 19:30 - 38)

இதையெல்லாம் குர்ஆன் கூறவில்லை தான். குர்ஆனில் சுருக்கமாகக் கூறப்பட்டதற்கு பைபிளில் தான் விளக்கம் காண முடியும் என்று ஜெபமணி கூறுகிறார். இது தான் மேலதிகமான விளக்கம் போலும். ஒரு சீர்திருத்தவாதி தீர்க்கதரிசி மதுபானம் அருந்தியதாகவும் பெற்ற மகளுடன் புணர்ந்ததாகவும். கூறுவது தான் வேதமா?

ஆதியாகமம் 9:21ல் நூஹ் நபி பற்றிக் கூறும் பைபிள் அவர் குடித்து விட்டு போதை தலைக் கேறி நிர்வாணமாக கிடந்ததாகக் கூறுகிறது. திருக்குர்ஆன் நூஹ் நபி பற்றி ஒழுக்கத்தின் உறைவிடமாகக் கூறுகிறது. பைபிளிலிருந்து குர்ஆன் எப்படி காப்பியடிக்கப்பட்டிருக்கும்? பதில் சொல்வாரா ஜெபமணி?

அல்லாஹ்வைப் பற்றி கர்த்தரைப் பற்றிக் கூட பைபிள் கூறும் போது கடவுள் அம்மனமாக நடப்பேன் என்று கூறியதாகக் கூறுகிறது. (மீகா 1:8) குர்ஆன் இறைவனை இப்படியெல்லாம் அறிமுகம் செய்யவில்லை.

இப்படி அடுக்கிக் கொண்டே போகலாம்.

பல நபிமார்களை குடிகாரர்களாகவும், விபச்சாரம் செய்தவர்களாகவும், பெற்ற மகள்களுடன் புணர்ந்தவர்களாகவும் வேட்;டியை அவிழத்துவிட்டு நிர்வாணமாகக் கிடந்தவர்களாகவும் பைபிள் கூறுகிறது. வழிகாட்ட வந்தவர்களே இப்படி நடந்திருக்கும் போது நாம் நடந்தால் தவறா என்ற சிந்தனையைத் தான் இது உருவாக்கும்.

குர்ஆன் இப்படியெல்லாம் கூறாமல் இருப்பதை ஜெபமணி குறை என்கிறார். காப்பியடிக்கப்பட்டது என்கிறார். ஜெபமணி இது போன்ற போக்கைக் கைவிடவில்லை என்றால் பைபிளில் இடம் பெற்ற எழுதக் கூசும் அசிங்கங்கள் அம்பலமாவதைத் தவிர வேறு வழியில்லை.

பைபிளிலிருந்து குர்ஆன் காப்பியடிக்கப்பட்டது என்று ஜெபமணி கூறுவதற்கு அவர் மதத்தைச் சேர்ந்த அவரை விடவும் அறிவிலும் கல்வியிலும் மிகப் பெரியவர்களே பதிலளித்துள்ளனர். காய்த்தல் உவத்தலின்றி அவற்றையாவது ஜெபமணி படித்தால் உண்மையை உணர்வார்.

ஆல்பிரட் குல்யாயும் என்ற கிறஸ்துவ மதத்தைச் சேர்ந்த அறிஞரால் எழுதப்பட்டு பெங்குவின் புத்தக நிறுவனம் வெளியிட்ட இஸ்லாம் என்ற ஆங்கில நூ லில்

தற்போது நம்மிடம் இருக்கின்ற குர்ஆன் மேற்சொன்ன நிலை அல்லது நிலைகளில் இருந்த முகமது மொழிந்தவைகளின் தொகுப்பாகும். அவர் மொழிவதைக் கேட்டவர்கள் வெளிப்பாட்டின் அறிகுறிகளை உணர்ந்தனர் என்பது சந்தேகத்திற்கு அப்பாற்பட்டதாகும். அப்படி இல்லாவிட்டால் அவர் சாதரணமாக பேசிய பரம்பரை நடை குர்ஆனிலுள்ள மொழி நடைகளோடு நிச்சயம் சேர்ந்திருக்கும் (பக்கம் 56)

இஸ்லாமின் முடிவான அற்புதம் குர்ஆனாகும். முகம்மது இறைவனின் தூதர் என்பதற்கான இறுதி அத்தாட்சி இது. அதைப் பெற்றவர் கற்றறியாதவராயிருந்தும் அதன் அரேபிய மொழி நடை சிறந்து விளங்குவது அது கடவுளிடமிருந்து வந்தது என்பதைக் கூட்டக் கூடும். வைதீக நம்பிக்கையின் படி இதன் இலக்கிய நடை இதன் பொருளுடன் இணைந்துள்ளதாகும். எவ்வளவு கவனமாகச் செயல்பட்டாலும் எவ்வளவு வெற்றிகரமாகப் பொருளைப் பாதுகாப்பதாக இருந்தாலும் மொழி பெயர்ப்பானது குர்ஆனின் இலக்கிய நடையை மாற்றுவதால் இந்த நூற்றாண்டின் இடைக்காலம் வரையும் குர்ஆனை மொழி பெயர்ப்பது விரும்பத்தகாததாகவும் இயலாததாகவும் கொள்ளப்பட்டது.

இப்படிச் சொல்வது யார்? முஸ்லிம்களிடம் எப்படி கிறிஸ்துவப் பிரச்சாரம் செய்ய வேண்டும் என்பதற்காக கென்னத் கிரேக் என்பவர் ஆங்கிலத்தில் ற்ட்ங் ச்ஹண்ற்ட் ர்ச் ண்ள்ப்ஹம் என்ற நூலை எழுதினார். அதை இஸ்லாமிய நம்பிக்கைகள் என்று மொழியாக்கம் செய்து நாகர்கோவில் கிறிஸ்துவ இறையியல் குழு எனும் அமைப்பு 1971ம் ஆண்டில் வெளியிட்டது. இந்நூலின் 75 76ம் பக்கம் இந்த விபரம் இடம் பெற்றுள்ளது.

ஒன்பதாம் மணி நேரத்தில் இயேசு ஏலீ ஏலீ லமா சபக்தானி என்று மிகுந்த சப்தமிட்டு கூறினார் அதற்கு என் தேவனே என் தேவனே ஏன் என்னைக் கைவிட்டீர் என்று அர்த்தமாம்

(மாத்தேயு 27:46)

ஒன்பதாம் மணி நேரத்திலே இயேசு எலோயீ எலோயீ லாமா சபக்தானி என்று மிகுந்து சப்தமிட்டுக் கூறினார். அற்கு என் தேவனே என் தேவனே ஏன் என்னைக் கைவிட்டீர் என்று அர்த்தமாம்.

(மாற்கு 15:34)

ஆதாம் செய்த பாவத்தால் உலகின் மனித இனத்தின் மீது படிந்த பாவக்கறையைத் தன் இரக்கத்தால் போக்குவதற்காக கர்த்தரின் சித்தத்தால் நிச்சயிக்கப்பட்டு அனுப்பப்பட்டவர் உலக மக்களின் பாவங்களைப் போக்க

சிலுவையில் பலியானவர் ஏன் கர்த்தரை நோக்கி என்னை ஏன் கை விட்டீர் என்று கதற வேண்டும்?

நாட்டுச் சுதந்திரத்துக்காக போராடிய கட்டப் பொம்மன், பகத்சிங் போன்றோர் கூட தூக்குத் தண்டனையைக் கண்டு அஞ்சவில்லை. சமீபகால சரித்திரமான விடுதலைப் புலிகள் கூட சயனைட் சாப்பிட்டு இறப்பதற்குத் தயங்கவில்லை. காலிஸ்தான் இயக்கத்திற்காக தூக்குத் தண்டனையைப் பெற்றவர்கள் கூட சாவதற்குத் தயங்கவில்லை. மகிழ்ச்சியுடன் மரணத்தை ஏற்பதாகக் கூறினார்கள். சாதாரண விடுதலை இயக்கத்திற்கு இல்லாத தயக்கமும் பயமும் மனித இனத்தின் மீட்பரான இயேசுவுக்கு வந்ததென்ன?

ஐயா ஜெபமணியாரே! மனித இனத்தின் பாவ மீட்புக்கு இயேசு பலியானதாக நம்புகிறீரே! அவர் தானாகப் போய் பிலாத்துவிடம் அகப்பட்டுக் கொண்டு மனித இன பாவ மீட்புக்கு என்னைப் பலி கொடுக்கிறேன் என்றா சொன்னார்? இல்லையே! மாறாக தன்னைத் தற்காத்துக் கொள்ளத் தானே முயன்றார். அப்படித் தானே பைபிள் கூறுகிறது.

குமாரன் தகப்பனுடைய அக்கிரமத்தைச் சுமக்கிறதுமில்லை. தகப்பன் குமாரனுடைய அக்கிரமத்தைச் சுமக்கிறதுமில்லை

(எசேக்கியேல் 18;20)

என்று கர்த்தர் சொல்லியிருக்க மனிதகுல பாவத்தைச் சுமக்க ஏன் வர வேண்டும்?

பிதாக்கள் செய்த அக்கிரமத்தை பிள்ளைகளிடமிருந்தும் பிள்ளைகளுடைய பிள்ளையிலிருந்தும் மூன்றாம் நான்காம் தலைமுறை மட்டும் விசாரிக்கிறவர்

(உபாகமம் 5:9 யாத்ராகமம் 34:7)

என்று கர்த்தர் சொன்னதற்கு மாற்றமாக அனைவரது பாவத்தையும் சுமக்க ஏசு ஏன் வந்தார்? எல்லோருடைய பாவத்தையும் இயேசு சுமந்து கொண்டால்

நான்காம் தலைமுறை மட்டும் விசாரிக்க முடியாமல் போகுமே? இது கர்த்தரின் சித்தத்துக்கே இடையூறல்லவா?

நரகத்தைப் பற்றி ஏசு பயமுறுத்துகிறாரே? அனைவருடைய பாவங்களையும் ஏசு சுமந்து விட்டால் நரகத்திற்குப் போகக் கூடியவர்கள் யார்? நரகம் காலியாகவே கிடக்க வேண்டியது தானா?

ஒரு வேளை தன்னுடைய சிலுவைப் பலியை நம்பியவர்களை மட்டும் அவர் ரட்சிப்பார் என்றால் இயேசு பிறப்பதற்கு முன்னுள்ளவர்களின் பாவத்தின் கதி என்ன?

அப்பாவமும் நீங்கி விட்டது என்று சொன்னால் இயேசுவின் சிலுவை மரணத்தை நம்பாமலும் பாவம் நீங்கி விடுகிறது என்று ஆகின்றதே?

அப்படியில்லை என்று கூறினால் பாவம் செய்த பிறகு தானே தண்டனை? இயேசுவின் காலத்தில் பிறக்காதவர்களின் பாவத்தை எப்படி ஏசு சுமப்பார்? ஒரே குழப்பமாக இறக்கிறதா? சிலுவை தத்துவமே குழப்பம் தான்.

பாவத்தை விட்டும் தவிர்ந்து கொள்ள வேண்டிய மனிதன் தன் பாவத்தைச் சுமக்க இரத்தம் சிந்திய ஒருவர் இருப்பதாக அறியும் போது துணிந்து பாவம் செய்வானே? பின் உலகில் பாவம் எப்படிக் குறையும்?

ஜபமணியாரே பதில் சொல்லுவீரா? இந்த பைபிளிலிருந்தா குர்ஆன் காப்பியடிக்கப்பட்டதாகச் சொல்கிறீர்கள்.

பக்கம் 18 ல்

போதித்தவனையே தெய்வமாகக் கருதி அவனையே வணக்கத்திற்குரியவனாக்கிக் கொண்டனர் என்கிறார்.

இறைவனைப் போதிக்குமாறு வந்த இயேசுவை இறைவனாக்கிக் கொண்ட ஜெபமணியாரே நீர் எழுதியதை நீரே சிந்தியும்.

சிரிப்பதற்கு எதுவும் வேண்டுமல்லவா? அதையும் பைபிள் தரத் தவறவில்லை.

அவன் காணிக்கையாவது போஜனப் பலியாகப் படைக்கும் பொருட்டு எண்ணெயிலே பிசைந்த மெல்லிய நாவினால் நிறைந்ததும் பரிசுத்த ஸ்தலத்தின் சேக்கல் கணக்காக நூற்று நுப்பது சேக்கல் நிறை உள்ளதுமான ஒரு வெள்ளித் தளமும் எழுபது சேக்கல் நிறையுள்ள ஒரு வெள்ளிக் கலமும் ஆகிய இவ்விரண்டும் தூப வர்க்கம் நிறைந்த பத்து சேர் நிறையுள்ள பொன்னினால் செய்த ஒரு தூப கரண்டியும் சர்வாங்க தகன பலியாக ஒரு காளையும் ஒரு ஆட்டுக் கடாவும் ஒரு வயதான ஒரு ஆட்டுக் குட்டியும் பாவ நிவாரண பலியாக ஒரு வெள்ளாட்டுக் கடாவும் சமதானப் பலியாக இரண்டு மாடுகளும் ஐந்து ஆட்டுக் கடாக்களும் ஐந்து வெள்ளாட்டுக் கடாக்களும் ஒரு வயதான ஐந்து ஆட்டிக் குட்டிகளுமே

(எண்ணாகமம் 7)

இப்படியே பட்டியல் நீளுகிறது. இப்படியெல்லாம் அமைந்துள்ள பைபிளிலிருந்துதான் குர்ஆன் காப்பியடிக்கப்பட்டதாகக் கூறுகிறார் ஜெபமணி.

பைபிளைப் பற்றி ஆராய்ந்த மேலை நாட்டு கிறித்தவ அறிஞர்கள் கூறுவதென்ன? அதையும் ஜெபமணிக்கு நினைவூட்டுவோம்.

பைபிளின் பெயருக்கு கடவுளின் வார்த்தை என்ற சொற்றொடரைப் பயன்படுத்துவது நமக்கு நன்கு பழக்கப்பட்ட ஒன்று. அதிலுள்ள ஒவ்வொரு வார்த்தையும் கடவுள் நேரடியாக ஏவியதாக பழைய காலத்திலும் தற்காலத்தில் சில பகுதிகளிலும் நம்பப்படுகின்றது. ஆனால் புத்தகத்தின் திறனாய்வும் தற்கால ஆய்வும் மேற்கண்ட கருத்துகளை தற்கால அறிஞர்கள் ஏற்றுக் கொள்ள இயலாததாக ஆக்கி விட்டன. ஒரு சில பழமையாளர்களைத் தவிர யூதக் கிறித்தவ அறிஞர்கள் தங்களின் புனித புத்தகத்தில் மனிதனுடையவும் அதே போன்று புனித சக்தியுடையவும் கருத்துக்கள் இடம் பெற்றுள்ளன என்பதை ஏற்றுக் கொண்டனர்.

(இது ஆல்பிரட் குல்யாயும் என்ற கிருத்துவ அறிஞர் ஆங்கிலத்தில் எழுதிய இஸ்லாம் என்ற நூ லில் பக்கம் 55ல் இடம் பெற்றுள்ளது)

மனிதக் கற்பனைகள் கலந்து கதைகளாக்கப்பட்டு விட்ட பைபிளிலிருந்து குர்ஆன் காப்பியடிக்கப்பட்டது என்று கூறுவதற்கு ஜெபமணி வெட்கப்பட வேண்டாமா?

புத்தகம் நீண்டு விடக் கூடாது என்பதனாலேயே இதை இத்துடன் நிறுத்திக் கொள்ள வேண்டிய நிலை. இல்லையென்றால் பைபிள் விமர்சனத்திற்கு பல நூல்கள் எழுதும் அளவுக்கு சரக்குகள் உள்ளன.

**விமர்சனம் 13**

இனி அடுத்த விமர்சனத்திற்கு வருவோம். இசுலாமிய வரலாறு என்ற தலைப்பில் அவர் கூறுவதைக் கேளுங்கள்.

இது காலத்தில் கத்தோலிக்கர், சேசு, மரியாள், சூசை சிலைகளைக் கொண்டு தங்கள் மதத்தை விருத்தி செய்துள்ளதையும் அறிந்து சிலையின்றி மதம் நிலையாது என்பதை முஹம்மது கண்டார். ஆகவே மெக்காவில் வணக்கத்திலிருந்த கஃபா கல்லைத் தங்கள் ஆதி தகப்பன் ஆபிரகாம், இஸ்மவேலைப் பலியிட்ட கல் இந்தக் கஃபா கல் என்று விளம்பி அந்தக் கல்லை தம் மதத்துக்கு அஸ்திபாரம் ஆக்கத் திட்டமிட்டார். இந்தக் கருப்புக் கல்லை வாழ்வில் ஒரு முறை வலம் வந்து தொட்டு முத்தி செய்தோரெல்லாம் சுவனபதியை அடைவர் என்று புதிதாகப் போதிக்கவும் செய்தார். தம் சகாக்களில் உண்மையான சீடர்களை மெக்கா திருவிழாவில் கருப்புக் கஃபா கல்லைத் தொழ வரும்படி அனுப்பி வைத்தார். இந்தக் கருப்புக் கல்லை வணங்குவதற்குச் செய்யும் பிரயாணத்திற்கு ஹஜ் என்று பெயர் . இது ஆரியரின் காசி யாத்திரைக்கு ஒப்பான ஒன்று. இந்தக் கருப்புக் கல்லை வணக்கத்திற்குள் கொண்டு வந்த முகமது மற்ற 359 சிலைகளையும் உடைத்து இல்லாமலாக்கி விட்டார். கஃபா சிலை நிலை நிறுத்தப்பட்டு விட்டது

(பக்கம் 26. 27)

ஜெபமணியாரின் உளறல்களிலே இது தான் உச்சகட்டமான உளறல் எனலாம்! ஜெபமணியின் அறியாமையை அகற்றி விட்டு அவரது வாதத்துக்கு விளக்கமளிப்போம்

கஃபா என்பது ஒரு கல் அல்ல. செவ்வகமாக அமைந்த ஒரு கட்டிடமே கஃபா என்பது. அந்தக் கட்டிடத்தின் ஒரு மூலையில் பதிக்கப்பட்டுள்ள ஒரு கல் ஹஜருல் அஸ்வத் என்று சொல்லப்படும் கறுப்புக் கல்லாகும். இந்தக் கருப்புக் கல்லை முதல் மனிதர் ஆதம் (அலை) அவர்கள் சுவனத்தில் இருந்து கொண்டு வந்தார்கள் என்ற நம்பிக்கையில் அந்தக் கல் கஃபாவின் ஒரு மூலையில் பதிக்கப்பட்டிருந்து.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் முப்பத்தி ஐந்தாம் வயதில் அவர்களுக்கு இறைவனின் வேத வெளிப்பாடு வருவதற்கு ஐந்து ஆண்டுகளுக்கு முன் பழுதடைந்திருந்த கஃபா கட்டிடம் இடிக்கப்பட்டு மீண்டும் கட்டுவதற்கான வேளையில் மக்காவாசிகள் ஈடுபட்டிருந்தனர்.

அந்தக் கட்டடத்தில் முன்னர் கறுப்புக் கல் பதிக்கப்பட்டிருந்த இடமளவுக்கு கஃபா கட்டிடம் உயர்ந்த போது அந்தக் கருப்புக் கல்லை எந்தக் கோத்திரத்தினர் பழைய இடத்தில் எடுத்து வைப்பது என்று அவர்களுக்கிடையே சச்சரவு ஏற்பட்டது. முடிவில் முதன் முதலாக இந்த இடத்திற்கு யார் வருகிறார்களோ அவர் கூறும் முடிவை ஏற்பது எனத் தீர்மானித்துக் கொண்டார்கள். அவர்கள் காத்திருந்த போது முதன் முதலாக முஹம்மது (ஸல்) அவர்கள் வருகை தந்தார்கள். பிரச்சனையை அவர்களிடம் ஒப்படைத்த போது சதுரமான துணி ஒன்றைக் கொண்டு வரச் செய்து அதில் அந்தக் கல்லை வைத்து அனைவரும் அந்தத் துணியை உயர்த்த முஹம்மது (ஸல்) அவர்கள் அந்தக் கல்லை தம் கையால் எடுத்து பழைய இடத்திலேயே வைத்து கட்டிடம் எழுப்பப்பட்டது.

கஃபா கருப்புக் கல் பற்றிய சுருக்கமான விளக்கமாகும் இது. இந்தச் சாதாரண விபரங்களைக் கூட அறிய வகையில்லாத ஜெபமணி கஃபா கல் சிலை என்றெல்லாம் பிதற்றி இருக்கிறார்.

கஃபாவின் ஒரு மூலையில் பதிக்கப்பட்ட அந்தக் கல்லை நபியவர்கள் தொட்டு முகர்ந்திருக்கிறார்கள் என்பது உண்மை. அது கடவுள் என்பதற்காகவா? அல்லது கஷ்டங்களைத் தீர்க்கும் என்ற நம்பிக்கையிலா? அந்தக் கல்லுக்கு தெய்வீக அம்சம் இருக்கிறது என்ற எண்ணத்திலா? இல்லை. இல்லவே இல்லை.

அந்தக் கல்லைத் தொட்டு முகர்ந்த நேரத்தில் நபியின் மிக நெருங்கிய தோழர் உமர் (ரலி ) அவர்கள் நீ ஒரு கல் என்பதை நான் நிச்சயமாக அறிவேன்; உனக்கு எந்த நன்மையும் செய்ய இயலாது. உன்னால் எந்தத் தீங்கும் செய்ய முடியாது என்பதையும் நான் அறிவேன்; நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் உன்னைத் தொட்டு முகர்ந்த காரணத்தினால் நானும் அவ்வாறு செய்கிறேன்; உன்னிடம் தெய்வீக அம்சம் இருப்பதால் அல்ல என்று குறிப்பிட்டார்கள்

(புகாரி. முஸ்லிம் மற்றும் ஏராளமான ஹதீஸ் நூல்களில் இது இடம் பெற்றுள்ளது.)

இதிலிருந்து அக்கல் பூஜிக்கப்படவில்லை; தெய்வீகத்தன்மை இருப்பதாக நம்பப்படுவதில்லை என்பது தெளிவாகிறது. அப்படியானால் என்ன காரணத்துக்காக அப்படிச் செய்ய வேண்டும்?

காஃபாவை மீண்டும் கட்டிய போது அதைக் கட்டிய அனைவரும் பல தெய்வக் கொள்கைக்காரர்கள் தான். ஓரிறைக் கொள்கையில் அன்று எவருமே இருக்கவில்லை. அந்தக் கட்டடத்தின் அஸ்திவாரம் முதல் மேல் மட்டம் வரை பல தெய்வ நம்பிக்கையாளர்களலேயே கட்டப்பட்டது. ஆனால் அந்தக் கருப்புக் கல் மாத்திரம் பல தெய்வ நம்பிக்கையில்லாதிருந்த நபியவர்களால் எடுத்து வைக்கப்பட்டது. இறை ஆலயத்தின் அந்த ஒரு கல்லைத் தன் கையால் எடுத்து வைக்க முடிந்ததே என்பதற்காக அதைத் தொட்டு முகர்ந்திருக்கலாம். தங்கள் நபியவர்களால் எடுத்து வைக்கப்பட்டது என்பதற்காக முஸ்லிம்களும் அவ்வாறு செய்கின்றனர்.

சில ஆண்டுகளுக்கு முன் சந்திர மண்டலத்திலிருந்து ஆம்ஸ்ட்ராங் தலைமையில் சென்ற குழு அங்கிருந்து மண்ணை அள்ளிக் கொண்டு வந்தார்கள். அது சாதாரண மண் தான் எனினும் அயல் கிரகத்து மண் என்பதற்காக பல நாடுகளுக்கும் அவை அனுப்பப்பட்டன. சென்னைக்கும் வந்தது. மண் என்று தெரிந்திருந்தும். அதைப் போய்ப் பார்த்தவர்களும் தொட்டு உணர்ந்தவர்களும் ஏராளம்.

இப்படிச் செய்ததால் அந்த மண்ணை வணங்கி விட்டதாக யாரேனும் கூறினால் அவனை விடப் பைத்தியக்காரன் யாரும் இருக்க முடியாது.

அயல் கிரகத்திலிருந்து வந்தது என்பதற்காக அந்த மண்ணைப் பலரும் சென்று தொட்டுத் தடவிப் பார்க்க விரும்பினார்கள். சுவனத்திலிருந்து ஆதம் (அலை) கொண்டுவந்த அந்தக் கல் சுவனத்தின் பொருட்களில் இவ்வுலகில் இருப்பது அந்தக் கல் மாத்திரமே என்ற நம்பிக்கையில் அயல் உலகின் பொருள் என்று

நம்பப்படுவதால் அது தொட்டுப் பார்க்கப்படுகிறதே தவிர வேறு எந்தத் தெய்வீக அம்சமும் அந்தக் கல்லுக்கு இல்லை. அப்படி தெய்வீக அம்சம் இருப்பதாக எவனாவது நம்பினால் அவனுக்கும் இஸ்லாத்திற்கும் எந்தச் சம்பந்தமுமில்லை.

சாதாரணக் கல் என்று முஸ்லிம்கள் பகிரங்கமாக ஒப்புக் கொண்டு விட்டு அதற்கு எந்தச் சக்தியும் இல்லை என்பதைப் பகிரங்கமாகப் பிரகடனமும் செய்து விட்டு அது நன்மையளிக்கவோ, தீமையளிக்கவோ எந்தச் சக்தியும் பெறாது என்பதையும் உலகறியச் சொல்லி விட்டு முஸ்லிம்கள் அதைத் தொட்டுப் பார்க்கிறார்கள்.

இவ்வளவு தெளிவாகப் பிரகடனம் செய்து விட்டு உள்ளத்திலும் அந்தக் கல் பற்றிய எந்த தெய்வீக அம்சம் எதையும் கொள்ளாமல் தொட்டுப் பார்ப்பதை வணக்கம் என்று ஜெபமணி கூறினால் அவரை விட அறிவிலி இருக்க முடியுமா? முடியாது.

காணக் கிடக்காத அபூர்வமான பொருளைக் கண்டு அதைத் தொட்டுத் தடவிப் பார்த்தால் அதை வணங்குவதாக யாரேனும் கூறுவார்களா? அந்தக் கறுப்புக் கல்லைத் தொடும் போது அதை விட மேலதிகமான தெய்வீக நம்பிக்கை முஸ்லிம்களிடம் இருக்காது.

**விமர்சனம் 14**

மெக்கா வர்த்தகர்கள் மதீனாவைக் கடந்து செல்லும் போதெல்லாம் மெதினா வாசிகள் வஞ்சம் தீர்க்கும்படி அவர்களைக் கொள்ளையடித்தனர். இப்படிக் கொள்ளையடிப்பதைத் தங்கள் மதத்தின் படி மார்க்க யுத்தம் என்கிறார்கள் என்று கூறுகிறார் ஜெபமணியார்

(பக்கம் 25)

மக்கா மதீனா ஆகிய ஊர்கள் இன்று ஒரு நாட்டின் இரண்டு நகரங்களாக உள்ளன. ஆனால் நபிகள் நாயகம் ஸல் அவர்கள் மதினா சென்ற பிறகு மக்காவில் தனி ஆட்சியும் மதினாவில் தனி ஆட்சியும் நடந்து வந்தன. மதினாவின் ஆட்சித் தலைவராக நபிகள் நாயகம் (ஸல்) அவர்களும் மக்காவின் ஆட்சித் தலைவராக அபூஜஹ்ல் அவனது மரணத்திற்குப் பின் அபூசுப்யான் ஆகியோர் இருந்தனர். இதைக் கவனத்தில் கொண்டு இப்பிரச்சனையை அலசுவோம்.

இந்தியாவும் சோவியத் யூனியனும் இரண்டு தனித் தனித் நாடுகள். நட்புறவு நாடுகள். நட்புறவு நாடுகள் என்றாலும் இந்தியாவிலிருந்து சில பொருட்களை எடுத்துக் கொண்டு சோவியத் யூனியனின் அனுமதி பெறாமல் ஜெபமணி போக முடியுமா? அப்படிப் போனால் சோவியத் அரசு அப்பொருட்களை பறிமுதல் செய்வதில்லையா?

நட்பு நாடுகளுக்கிடையே கூட இந்த நிலை என்றால் இந்தியாவும் பாக்கிஸ்தானும் போல் பகை நிலவும் நாடுகளுக்கிடையே எதையேனும் அனுமதி பெறாமல் கொண்டு செல்ல முடியுமா? அதுவும் போர் மோகம் சூழந்துள்ள நேரங்களில் இதை எந்த அரசேனும் அனுமதிக்குமா? ஒருக்காலும் அனுமதிக்காது.

இலங்கையிலிருந்து கடத்தி வரும் தங்கத்தை இந்திய அரசு பறிமுதல் செய்கிறது. அதைக் கொள்ளையடித்தல் என்பாரா?

அட இது கூட வேண்டாம். தமிழ்நாட்டுக்குள்ளேயே ஒரு மாவட்டத்திலிருந்து இன்னொரு மாவட்டத்திற்கு அனுமதி இன்றி நெல்லைக் கூட எடுத்துப் போக முடியாதே. அப்படி எடுத்துச் சென்றால் அரசு பறிமுதல் செய்கிறதே. இது கொள்ளையடிப்பது ஆகுமா?

இது போன்று தான் நபிகளின் ஆட்சிக்கு உட்பட்டிருந்த பகுதிக்குள் எதிரி நாட்டினர் அதுவும் கடுமையான எதிர்ப்பைக் காட்டிக் கொண்டிருந்தவர்கள் அத்துமீறிப் பிரவேசிப்பதை அனுமதிக்க முடியுமா? ஆட்சித் தலைவர் என்ற முறையில் தன் ஆளுகைக்கு உட்பட்ட மக்களையும் அந்தப் பகுதிகளையும் காக்கும் பொறுப்பு அவர்களுக்கு உண்டல்லவா? இதனடிப்படையிலேயே அது போன்ற நடவடிக்கைகளை மேற்கொண்டார்கள். இது தவறா?

கிறித்தவர்களின் ஆட்சி நடக்கும் நாடுகளுக்கு கிறித்தவரான ஜெபமணி கூட இந்தியாவில் உள்ள பொருட்களை வியாபார நோக்கில் அந்த அரசின் அனுமதி பெறாமல் கொண்டு செல்ல முடியாதே. அது ஏன்?

கொண்டு சென்றால் பறிமுதல் செய்து கைதும் செய்கிறார்களே? இது நியாயம் என்று கூறினால் இதை விடவும் ஆயிரம் மடங்கு நியாயம் நபிகளின் செயலுக்கு கூறலாமே!

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஜெபமாலையை உருட்டிக் கொண்டு நாடோடியாக ஊர் சுற்றிக் கொண்டு இருந்தவர் அல்ல. மாறாக ஆட்சித் தலைவராக போர்ப்படைத் தளபதியாக இருந்தவர்.

மக்காவும், மதீனாவும் அன்றைய நிலையில் இரு வேறு ஆட்சிகள் நடந்த இரு நாடுகள். இரு ஊர் வாசிகளும் ஒருவருக்கொருவர் பகை கொண்டிருந்த நேரம். இந்த நேரத்தில் அத்து மீறி மதீனா நாட்டில் (நகரத்தில் அல்ல) திமிராகப் பிரவேசிக்கும் போது மதீனா நாட்டின் இறையாண்மைக்குச் சவால் விடும் போது , அந்த நாடு கை கட்டிக் கொண்டு இருக்க வேண்டும் என்கிறாரா ஜெபமணி? நுனிப்புல் மேயும் ஜீவன்களால் இதைப் புரிந்து கொள்ள முடியுமா?

**விமர்சனம் 15**

இப்படியாக பதர் யுத்தத்தால் மெக்காவாசிகளை முகமது உடனிருந்து வெற்றிக் கொண்டார். இது முதல் முகமதுவின் புகழ் பரவ ஆரம்பித்தது. மெக்காவாசிகள் மதினாவிலுள்ள யூதர்களைத் தங்கள் வசப்படுத்திக் கொண்டு உஹித் என்ற போரில் முகமதுவின் படையினரை படுதோல்வி அடையச் செய்து விட்டனர். ஆயினும் மதினா நகரைக் கைப்பற்றிக் கொள்ளவில்லை. யூதர்கள் இந்தப் போரில் மெக்காவாசிகளுக்கு வஞ்சகமாக உதவியதை அறிந்து முகமது யூதர்களில் 800 பேரைக் கொன்று அவர்களின் பெண்களைச் சிறைபிடித்து மனையாட்டிகளாக்கிக் கொண்டனர். இது மதினா மக்களுக்கு பெரும் மகிழச்சியையும் புதிய தெம்பையும் உண்டாக்கியமையால் யூதர்களை அழிப்பதையே தங்கள் மார்க்கக் கடமை சொல்ல ஆரம்பித்தனர். தானியேல்6:10ல் படி சமயம் வரை முகமது எருசலேமை உற்று நோக்கியே தொழுதார் என்கிறார் ஜெபமணி.

(பக்கம் 26)

எப்படியிருக்கிறது ஜெபமணியின் பிதற்றல்? உலக வரலாற்றில் போர்க்களத்தில் புதுநெறி புகுத்தியவரும் எதிரிகளையும், கைதிகளையும் நியாயத்துடன் நடத்தியவருமான முஹம்மது (ஸல்) அவர்களைப் பற்றி வரலாற்றுக்கு முரணாகச் சித்தரிக்கும் இலரைப் பண்டைய வரலாற்றைக் கொஞ்சம் படிக்கச் சொல்கிறோம்.

எதிரி நாட்டு நீர் நிலைகளை யானையை விட்டுக் கலக்கியும், விளைநிலங்களை எரியூட்டியும், தோற்றவனின் பற்களைப் பிடுங்கி கோட்டைக் கதவில் பதித்ததும், தோற்றவரின் மனைவியரின் கூந்தலை வெட்டி அவமதித்ததும் தான் கடந்த காலப் போர் நெறிகளாகக் கருதப்பட்டு வந்தன.

இவற்றையெல்லாம் மாற்றி அமைத்த நபிகள் நாயகம் (ஸல்) பற்றி கொச்சையாக விமர்சிக்கிறார் ஜெபமணி. இதற்கு விளக்கம் தருவதற்கு முன் ஜெபமணியின் வேத நூலான பைபிள் சமாச்சாரத்தைக் கொஞ்சம் பார்ப்பது நல்லது.

யோசுவா கர்த்தர் தனக்குச் சொன்னபடி அவர்களுக்குச் செய்து அவர்கள் குதிரைகளின் குதிகால் நரம்புகளை அறுத்து, அவர்கள் இரத்தங்களை அக்கினியால் சுட்டெரித்தான். அக்காலத்திலே யோசுவா திரும்பி ஆத்சோரைப் பிடித்து அதன் ராஜாவைப் பட்டயத்தினால் வெட்டிப் போட்டான். ஆத்சோர் அந்த ராஜ்ஜியங்களுக்கெல்லாம் தலைமையான பட்டணமாயிருந்தது. அதிலிருந்த நர ஜீவன்களையெல்லாம் பட்டாயக் கருக்கினால் வெட்டிச் சங்காரம் பண்ணினார்கள். சுவாசமுள்ளது ஒன்றும் மீதியானதில்லை. ஆத்சோரையோ அக்கினியால் சுட்டெரித்தான். அந்தப் பட்டணங்களில் உள்ள மிருக ஜீவன்களையும் மற்றப் பொருள்களையும் இஸ்ரவேல் புத்திரர் தங்களுக்கென்று எடுத்துக் கொண்டார்கள். ஆனாலும் எல்லா மனுஷரையும் அழித்து தீருமட்டும் அவர்களைப் பட்டயக் கருக்கினால் வெட்டிப் போட்டார்கள் சுவாசமுள்ள ஒன்றையும் அவர்கள் மீதியாக வைக்கவில்லை.

(யோசுவா 11:9 .11. 14)

அவர்களை நோக்கி ஸ்திரீகள் எல்லோரையும் உயிரோடு விட்டு விட்டீர்களா?குழந்தைகளில் எல்லா ஆண்களையும் புருஷ சம்போகத்தை அறிந்த எல்லா ஸ்திரீகளையும் கொன்று போடுங்கள்? ஸ்திரீகளில் புருஷ சம்போகத்தை அறியாத எல்லாப் பெண்களையும் உங்களுக்காக உயிரோடு விட்டு வையுங்கள் ? என்கிறது பைபிள்

(எண்ணாகமம் 31:15 .17 . 18)

இது போல் இன்னும் அனேக வசனங்கள் பைபிளில் மலிந்து கிடப்பதைக் காணலாம். அதுவும் கர்த்தரின் கட்டளைப்படியே நடந்ததாகக் கூறப்படுகிறது. போரில் சம்பந்தப்படாத பச்சிளம் குழந்தைகளையும் வெட்டிக் கொல்லுமாறு சொல்லும் மதம் உலகத்தில் ஏதேனும் உண்டா? இவ்வாழ்வை அனுபவித்த பெண்களையெல்லாம் வெட்டிக் கொல்லுமாறு கடவுள் கூறுவாரா? கன்னி கழியாத பெண்களை மட்டும் நீங்கள் அனுபவிப்பதற்காக வைத்துக் கொள்ளுங்கள் என்று கடவுள் கூறுவாரா?

கிறிஸ்துவம் கூறுகிறது; பைபிள் கூறுகிறது; கிறிஸ்தவர்களின் கர்த்தர் கூறியிருக்கிறார். இதை வேதமாக ஏற்றுக் கொண்டிருக்கின்ற ஜெபமணியார் 800 யூதர்களைக் கொல்ல நபிகளார் உத்தரவிட்டதை விமர்சனம் செய்யும் அருகதையில்லாதவர். ஜெபமணிக்கு இந்த அருகதை இல்லை என்றாலும் அவரது விமர்சனத்திற்கு நாம் விளக்கம் தருவோம். அதற்கு முன்னால் முக்கிய விஷயம் ஒன்றை நாம் அறிந்து கொள்வது அவசியம்.

குற்றங்களையும், குற்றவாளிகளையும் இஸ்லாம் பார்க்கும் பார்வை வேறு. ஏனைய அரசியல் மத சித்தாந்தங்களின் பார்வை வேறு.

தொடர்ந்து குற்றங்கள் புரிவோருக்கு எந்த போதனையும் பயன் தராது. திருடுபவன் அதைத் தவறு என்று தெரிந்து தான் திருடுகிறான். விபச்சாரம், கொலை செய்தவனுக்கு அது தவறு என்று நன்றாகவே தெரியும். தவறு என்று நன்றாகத் தெரிந்தும் தவறு செய்பவனை திருத்தவும் அவனது தவறிலிருந்து சமுதாயத்தைக் காப்பதும் எப்படி?

இஸ்லாம் சொல்கிறது; இது போன்ற குற்றவாளிகளுக்கு எதிராகக் கடுமையான தண்டனைகள் வழங்கப்பட வேண்டும்; திருடினால் கையை வெட்ட வேண்டும்; விபச்சாரத்திற்குக் கல்லெறிந்து கொல்ல லேண்டும். இது போன்று எல்லா குற்றங்களுக்கும் இஸ்லாம் வழங்கும் தண்டனைகள் கடுமையானவை. குற்றவாளிகளிடம் இஸ்லாம் இரக்கம் காட்டுவதில்லை. இந்தச் சட்டங்களை நடைமுறைப்படுத்தியதன் மூலம் சவூதி அரேபிய அரசாங்கம் தனது நாட்டில் குற்றங்களைக் குறைத்துள்ளது. உலகில் எந்த நாடுகளை விடவும் சவூதியில் மட்டும் தான் குற்றங்கள் குறைவு என்பது நிரூபணமாகி வருகின்றது

(மற்ற விஷயங்களில் சவூதி இஸ்லாத்தைப் பின்பற்றுகிறதா? என்பது தனி விஷயம்.)

குற்றவாளிகளுக்குரிய தண்டனை போதுமானதாக இல்லாவிட்டால் ஐம்பது முறை சிறை சென்றவர் மீண்டும் கைது என்ற செய்திகளைத் தான் படிக்க வேண்டும். ஐம்பது முறை ஒருவன் சிறை பிடிக்கப்பட்டிருக்கிறான்; மக்கள்

வரிப்பணத்தில் அவனுக்கு சிறைச் சாலையில் வசதிகள் செய்யப்படுகின்றன. இதன் பிறகும் ஐம்பத்தி ஒன்றாவதாகவும் அதே தவறை செய்கிறான் என்றால் என்ன காரணம்? இந்தத் தண்டனை அவனை எச்சரிக்கப் போதுமானதாக இல்லை. இது அவனோட முடிந்து விடக் கூடியது அல்ல. இதைக் காணும் மற்றவர்களுக்கும் கூட குற்றம் செய்யத் துணிவைப் பெறுகிறார்கள்.

திருடுபவனின் கையைப் பகிரங்கமாக வெட்டினால் அவனும் திருட மாட்டான். திருடும் எண்ணம் வந்து விட்டாலும் மற்றவனும் இதற்கு அஞ்சி திருடுவதைத் தவிர்ப்பான், இதை இஸ்லாம் கூறுகிறது. இது கொடூரமாகத் தெரிந்தாலும் இது அவசியமான கொடூரமே.

நல்லவர்களையும், அப்பாவிகளையும் பாதுகாக்க இந்தக் கொடூரம் அவசியமே. உலகம் இன்றைக்கு இதை ஏற்றுக் கொள்வதைத் தவிர வேறு வழி இல்லை என்று சிந்திக்கத் தலைப்பட்டு விட்டது.

இந்த அடிப்படையை மனத்தில் கொண்டு சில யூதர்களை இஸ்லாம் வெட்டிக் கொன்றதை அணுகுவோம். மதீனா என்பது தனி நாடு. அந்த நாட்டுப் பிரஜைகள் அந்த நாட்டிற்கு விசுவாசமாகவும் சட்டங்களுக்குக் கட்டுப்பட்டும் நடக்கக் கடமைப்பட்டுள்ளார்கள். இந்தக் கட்டத்தில் அந்த நாட்டு பிரஜைகள் அந்த நாட்டு ரகசியங்களை எதிரி நாடாகிய மக்காவுக்குச் சொன்னால்- படையடுத்து வருமாறு தூண்டினால்- கள்ள உறவு வைத்திருந்தால்- அதை விட துரோகச் செயல் எதுவும் இருக்க முடியாது. எதிரிகள் படை எடுத்து வந்து அங்குள்ள மக்களை கருவருப்பதற்கு இந்தத் துரோகிகள் காரணமாக இருக்கிறார்கள்.

இந்தியாவுக்கும், பாகிஸ்தானுக்கும் போர் மேகம் சூழ்ந்திருக்கும் நிலையில் இந்தியப் பிரஜை இந்நாட்டு இரகசியங்களை பாகிஸ்தானுக்குக் காட்டிக் கொடுத்தால் இந்திய அரசு வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்குமா? மாறாக தண்டிக்கும் கைது செய்யும் சிறையிடும்! நாடு கடத்தும்.

ஆனால் எல்லாக் குற்றங்களுக்கும் கடுமையான தண்டனை வழங்குகின்ற இஸ்லாம் பல உயிர்கள் பலியாகும் வகையில் நாட்டைக் காட்டி

கொடுத்தவர்களுக்கு மரண தண்டனையையே பரிசாக வழங்குகிறது. அப்போது தான் மற்றவர்கள் இது போன்ற காரியங்களில் ஈடுபட மாட்டார்கள்.

ஜெயிலில் போடுவதாலோ, கைது செய்வதாலோ இக்குற்றங்களைக் களையெடுப்பது சாத்தியமில்லை.

இந்தியா சுதந்திரம் அடைந்தது முதல் இது போன்ற தேசத் துரோகிகள் கைது செய்யப்பட்டு தண்டிக்கப்பட்டனர். இன்னமும் அந்தக் காரியத்தைச் செய்பவர்கள் இருக்கிறார்கள் என்றால் தண்டனை போதவில்லை என்பது தானே இதன் பொருள் .

மதீனாவை ஒரு ஊர் என்று பார்க்காமல் ஒரு நாடு என்று புரிந்து கொண்டால் முகம்மது நபி மதத் தலைவர் மட்டுமின்றி ஆட்சித் தலைவராவும் இருந்தவர்கள் என்பதையும் புரிந்து கொண்டால் தன் நாட்டு விசுவாசமான பிரஜைகளைக் காப்பதற்காக எடுத்த நியாயமான நடவடிக்கையே இது என்பதை ஜெபமணியால் விளங்க முடியும்

**விமர்சனம்** 16

பலதார மணம் பற்றியும் ஜெபமணி கிண்டல் செய்திருக்கிறார். அதற்கு நமது அல் ஜன்னத் இதழில் வெளிவரும் மாற்றாரின் பார்வையில் இஸ்லாம் என்ற தொடர் கட்டுரையில் விளக்கம் அளிக்கப்பட்டு வருகிறது என்பதால் அதற்கான நியாயங்களை இங்கே கூறுவது கூறியது கூறலாகி விடும். அதனால் அதைத் தவிர்ப்போம் .

ஆனால் ஜெபமணி ஒப்புக் கொண்ட பைபிள் பல தார மணம் பற்றிக் கூறுவதை மாத்திரம் ஜெபமணிக்கு எடுத்துக் காட்டுவது இங்கு அவசியமாகிறது.

ஆபரகாமுக்கு சாரா என்றொரு மனைவி இருந்ததாக ஆதியாகமம் 12:5 லும், கேத்தூரால் என்று இன்னொரு மனைவி இருந்ததாக ஆதியாகமம் 25:1லும் பல மனைவிகள் ஒரே சமயத்தில் அவருக்கு இருந்ததை ஆதியாகமம் 25:6லும் கூறப்படுகிறது.

ஏசா என்பவருக்கு (இஸ்ஹாக் நபியின் மகன்) யூதித், பஸ்மாத் என்ற பெயர்களில் இரு மனைவியர் இருந்ததை ஆதியாகமம் 29:34ல் கூறுகிறது. மேலும் அதே ஏசா மகளாத் என்பவளையும் திருமணம் செய்து கொண்டதாக ஆதியாகமம் 28:9 கூறுகிறது. அவருக்கு ஆதாள். அக்கோ பாமாள் என்று மேலும் இரு மனைவிகள் இருந்ததை ஆதியாகமம் 36:2 கூறுகிறது.

யாக்கோபு அவர்களுக்கு அதாவது யூத கிறித்துவ பரம்பரையின் தந்தையாகிய இஸ்ரேல் எனும் யாக்கோபுக்கு லேயாள் என்று மனைவி இருந்ததாக ஆதியாகமம் 29:23 லும் இராகேல் என்று மற்றொரு மனைவி இருந்ததாக ஆதியாகமம் 29:28 லும் பில்காள் என்று இன்னொரு மனைவி இருந்ததாக ஆதியாகமம் 30:4 லும் சில்பாள் என்று ஒரு மனைவி இருந்ததாக ஆதியாகமம் 30:9 லும் கூறப்படுகிறது.

மாதிரிக்குச் சிலவற்றை மட்டும் இங்கு குறிப்பிட்டுள்ளோம். பலதாரத் திருமணத்தைக் கிண்டல் செய்ய ஜெபமணிக்கு அருகதை இல்லை என்பதற்காகவே இந்த எடுத்துக் காட்டுக்கள். பல தாரமணம் சரியானதே

என்பதற்கான நியாயங்கள் மாற்றாறின் பார்வையில் இஸ்லாம் கட்டுரைத் தொடரில் விளக்கப்பட்டு வருகிறது.

**விமர்சனம் 17**

தானியேல் 6:10ன் படி இது சமயம் வரை முகமது எருசலேமை உற்று நோக்கியே தொழுதார்

(பக்கம் 26)

இது சமயம் முகமது எங்கிருந்தும் கடவுளைத் தொழலாம் என்ற கொள்கையிலிருந்து மாறி ஒவ்வொரு தொழுகையிலும் கிப்லா மேற்கி லிருக்கும் கஃபா கோயிலை எண்ணி அதை உற்றுப் பார்க்கும் நிலையிலும் தொழுது கொள்ளும் படி ஒரு நிலமையையும் 40ரக்அத்துகள் நிலைகளில் பிரதான நிலையாகவும் நியமித்தார்

(பக்கம் 28)

40 ரக்அத்துகள் என்று இவர் கூறுவதிலிருந்து இவர் இஸ்லாம் பற்றி அடைந்துள்ள தெளிவை அறிந்து கொள்கிறோம்.

முஸ்லிம்கள் கஃபாவை நோக்கித் தொழுவது அங்கே இறைவன் இருக்கிறான் என்பதற்கு அல்ல. வணக்க முறைகளில் ஒரு ஒழுங்கு இருக்க வேண்டும். ஒரு இடத்தில் தொழுபவர்களில் சிலர் கிழக்கிலும் வேறு சிலர் மேற்கிலும் மற்றும் சிலர் வடக்கிலும் முன்னோக்கி நின்றால் ஒழுங்கு கெடும். ஏதேனும் ஒரு பக்கமாக அனைவரும் முன்னோக்க வேண்டும். இறைவனை வணங்குவற்காக முதன் முதலில் எழுப்பப்பட்ட கஃபா ஆலையம் இருக்கும் திசையை இஸ்லாம் தேர்ந்தெடுத்தது. எந்தப் பக்கத்தை தேர்ந்தெடுத்தாலும் அதில் கேள்விகள் எழுவது இயற்கை.

கஃபாவுக்குள்ளே இறைவன் இல்லை என்பதைப் பகிரங்கமாக அறிவிக்கும் விதமாக ஜெருசலேம் நோக்கியும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தொழுதும் காட்டியுள்ளனர். கஃபா திசை எந்தப் பக்கம் என்பது தெரியாத போது எந்தப் பக்கமும் முன்னோக்கித் தொழலாம் என்றும் இஸ்லாம் கூறுகிறது. உலக முஸ்லிம்கள் அனைவரின் கொள்கையும் நடவடிக்கைகளும் ஒரே விதமாக அமைந்திருக்க வேண்டும் என்பது போலவே அவர்கள் முன்னோக்கும்

பொருளும் ஒன்றாக இருக்க வேண்டும் என்பதைத் தவிர வேறு காரணம் இல்லை. கஃபாவில் இறைவன் இருப்பதாகவோ அல்லது காஃபாவை வணங்குவதாகவோ எவரேனும் நம்பினால் அவரும் இஸ்லாத்தை விட்டு வெளியேறுகின்றார்.

**விமர்சனம் 18**

இப்படி இருக்க இசுலாம் சகோதரத்துவம் ஜாதி பேதமற்ற மார்க்கத்தைக் கொண்டது என்று கூறுவது பண்பாட்டுக்கு ஒவ்வாது என்பது நம் கருத்து. தமிழக அரசு முஸ்லி ம்களில் 8ஜாதியரை ஞ்.ர்.ம்.ள்.ய்ர் 1564 30லி7லி85 ல் குறிப்பிடுகிறது ஆகவே தமிழகத்தில் முஸ் லிம்கள் மத்தியில் 8க்கும் அதிகமான ஜாதி பிரிவுகள் உண்டு என்பது தெளிவாகிறது. என்கிறார் ஜெபமணி

(பக்கம் 31)

ஒரு மதத்தை ஒரு கட்சியை விமர்சனம் செய்வது என்றால் அந்த மதத்தின் கொள்கைகளை விமர்சிக்க வேண்டும். அந்த மதத்தின் அடிப்படை சட்ட நூல்களை விமர்சிக்க வேண்டும். அது தான் விமர்சனத்தின் இலக்கணமாகும். இஸ்லாம். கூறாததை சில இஸ்லாமியர்கள் தவறாகச் செய்து வருவதை எடுத்துக் காட்டி அதற்கு இஸ்லாத்தைப் பொறுப்பாளியாக்குவது மதியீனம் அல்லவா?

மனிதர்களே! உங்கள் அனைவரையும் ஒரே ஆண் ஒரே பெண்ணிடமிருந்து படைத்தோம். உங்களைப் பல்வேறு கிளைகளாகவும், கோத்திரங்களாகவும் நாம் ஆக்கியிருப்பது ஒருவரை ஒருவர் அறிந்து கொள்வதற்கு. இறைவனிடம் உங்களில் சிறந்தவர் இறைவனை அஞ்சி நடப்பவரே என்று அல்குர்ஆன் ஜாதிக்கு எதிராக சவுக்கடி தருகிறது.

ஜாதிக்கு எதிராக இஸ்லாம் எடுத்த கடும் நடவடிக்கையைப் போல் வேறு எந்த இஸங்களும் எடுத்திருக்க முடியாது. ஒரு சில முஸ்லிம்கள் முட்டாள்தனமாக தங்களை பிரித்துக் கொண்டு விட்டார்கள் என்றால் அதற்கு இஸ்லாம் எப்படிப் பொறுப்பாகும்?

திரவியராஜ் என்ற பாதிரியார் மருமகளைக் கற்பழித்துக் கொலையும் செய்ததாகக் குற்றம் சுமத்தப்பட்டுள்ளாரே? இதைக் காரணமாக வைத்து கிறித்துவ மார்க்கம் தான் இவ்வாறு போதித்தது என்று நாம் கூறினால் ஜெபமணி ஒப்புக் கொள்வாரா?

முஸ்லிம்களில் எட்டு ஜாதியினர் இருப்பதாக அரசாங்க கெஜட் கூறுவதாகக் குறிப்பிடுகிறார். அரசாங்க கெஜட் என்ன முஸ்லிம்களின் வேதப் புத்தகமா?தீர்க்கத்தரிசியின் உபதேசமா? அப்படி எட்டு ஜாதி இருப்பதாகக் குறிப்பிடப்பட்டிருக்குமானால் முட்டாள்தனமாகக் குறிப்பட்டுள்ளார்கள் என்று நாம் கூறுவோம்.

ஆயிரம் தான் ஜெபமணி புலம்பினாலும் கிறித்தவ நாடார் கிறித்துவ முதலியார் என்று கிறித்தவத்தில் இணைந்த பின்னரும் ஜாதியை ஒட்டி வைக்கிறார்கள். இஸ்லாத்தில் அப்படி எல்லாம் கிடையாது என்பதைப் புதிதாக இஸ்லாத்தில் இணைவோர் புரிந்து வைக்கிறார்கள். அனுபவப் பூர்வமாக அதை உணர்ந்தும் இருக்கிறார்கள்.

இந்த இடத்தில் முஸ்லிம்களுக்கும் ஒன்றை நினைவு படுத்துவது அவசியமாகிறது. அரசாங்கச் சலுகைகள் பெறுவதற்காக மரைக்காயர், லெப்பை, இராவுத்தர், தக்னி என்றெல்லாம் தங்களைத் தனி இனமாகக் காட்டி சலுகை பெறுவதை அவர்கள் தவிர்க்க வேண்டும். பொருளாதார ரீதியில் மாத்திரம் முஸ்லிம்களை ஏழை பணக்காரர் என்று பார்த்து சலுகை பெறுவதற்கு போராட வேண்டும். அரசாங்க கெஜட்டில் முஸ்லிம்களை லெப்பை தக்னி என்றெல்லாம் பிரிக்கப்பட்டுள்ளதற்கு எதிராகக் குரல் கொடுக்க வேண்டும்.

(அடிக்கோடிட்ட பாரா அன்றைய நிலையில் நாம் எழுதியது. அந்தக் கருத்தை நாம் பின்னர் தக்க காரணத்துடன் மாற்றிக் கொண்டோம்.)

ஜெபமணி போன்ற அறிவீனர்கள் இஸ்லாத்திலும் ஜாதி உண்டு என்று எண்ணுவதற்கு இடமளிக்கலாகாது. என்பதை நினைவூட்டுகிறோம். இந்த நினைவூட்டல் ஷாபி, ஹனபி என்று தங்களை தனி இனமாகக் ஆக்க முயற்சிப்பவர்களுக்கும் சேர்த்தே.

ஜாதி பற்றி பேச வந்துள்ள ஜெபமணியை இனி கவனிப்போம். இஸ்லாத்தை விமர்சிப்பது என்றால் அல்குர்ஆன் ஹதீஸ் இரண்டை மட்டும் விமர்சிக்க

வேண்டும் என்ற அளவு கோல் படியே கிறித்துவத்தை நாம் விமர்சிக்கும் போது பைபிளையே விமர்சிப்போம்.

கிறித்தவர்கள் பல ஜாதிகளாக இருக்கிறார்கள் என்பதற்காக கிறித்தவம் ஜாதியை ஆதரிக்கிறது என்று ஜெபமணியை போல் நாம் விமர்சிக்க மாட்டோம்.

பைபிள் அதை ஆதரித்தால் மட்டுமே கிறித்தவத்தை பொறுப்பாளி ஆக்குவோம்.

கிறித்தவர்கள் ஒவ்வொரு ஜாதிக்கும் தனிக் கோவில், தனிக் கல்லறை வைத்துக் கொண்டிருக்கிறார்கள் என்பதற்காக கிறித்தவ மதத்தை இதற்குப் பொறுப்பாக்க மாட்டோம். பைபிளே அதை அனுமதிக்கின்றதா என்று பார்ப்போம்.

இந்த அளவுக்கோலின்படி பைபிள் ஜாதி பற்றி கூறுவதென்ன?

அன்னிய ஜாதியான் கையிலே நீ கடனைத் தண்டலாம். சகோதரனிடத்திலோ உனக்கு வர வேண்டியதை விட்டுவிடக் கடவது

(உபாகமம் 15:3 )

அன்னிய ஜாதியானிடம் ஒரு விதமாகவும் தனது ஜாதியானிடம் இன்னொரு விதமாகவும் நடக்கும் படி பைபிள் போதிக்கிறதா இல்லையா ? ஜாதியை வலி யுறுத்துகிறதா இல்லையா?

ஈசாக்கு யாக்கோபை அழைத்து அவனை ஆசிர்வதித்து கானானியருடைய குமாரத்திகளில் பெண் கொள்ளாமல்.... என்கிறது பைபிள்

(ஆதியாகமம் 28:1 )

திருமணம் செய்வதற்கு ஈசாக்கு ஜாதி பார்த்ததாக கிருத்தவ மதமே ஒப்புக் கொள்கிறது.

அப்பொழுது அந்தத் திசைகளில் குடியிருக்கிற கானானிய ஸ்திரி ஒருத்தி அவரிடத்தில் வந்து ஆண்டவரே தாவீதின் குமாரனே! எனக்கு இரங்கும்! என் மகள் பிசாசினால் கொடிய வேதனைப்படுகிறாள் என்று சொல்லிக் கூப்பிட்டாள். அவளுக்கு பிரதியுத்தமாக அவர் ஒரு வார்த்தையும் சொல்லவில்லை

அவர்களுடைய சீஷர்கள் வந்து இவள் நம்மைப் பின் தொடர்ந்து கூப்பிடுகிறாளே இவளை அனுப்பிவிடும் என்று அவரை வேண்டிக் கொண்டார்கள். அதற்கு அவர் காணாமல் போன ஆடுகளாகிய இஸ்ரவேல் வீட்டாரிடத்திற்கு அனுப்பப்பட்டேனே யன்றி மற்றபடியல்ல என்றார். அவள் வந்து ஆண்டவரே எனக்கு உதவி வெய்யும் என்று அவரைப் பணிந்து கொண்டாள். அவர் அவனை நோக்கி பிள்ளைகளின் அப்பத்தை எடுத்து நாய்க் குட்டிகளுக்குப் போடுகிறது நல்லதல்ல என்றார்.

(மத்தேயு 15:22 26 )

இஸ்ரவேல் அல்லாத இனத்தினரை நாய்கள் என்று தேவ குமாரன் வர்ணித்ததற்கும் வர்ணாசிரமத்திற்கும் என்ன வித்தியாசம் உள்ளது?

பைபிள் இஸ்ரவேலரைப் பிராமணர்களைப் போல் உயர்ந்த ஜாதியாகக் கூறுகிறது என்பதற்கு வேறு என்ன சான்று தேவை? உலக ரட்சகர் என்று இன்று அறிமுகப்படுத்தப்படும் ஏசு இஸ்ரவேல் ஜாதிக்கு மட்டுமே அனுப்பப்பட்டதாக வாக்கு மூலம் தருவதையும் ஜெபமணியார் கவனிக்க வேண்டும்.

இஸ்ரவேல் குடும்பத்தைச் சேராத ஜெபமணி கூட பைபிள் முடிவுப்படி நாய்களுக்குச் சமமானவரே! என்பதை அவர் உணர வேண்டும் இதே வார்த்தைகள் மாற்கு 7:27 லும் கூறப்படுகிறது.

இப்படி ஏராளமான வசனங்களை பைபிளில் காண முடியும். கிறித்தவர்களின் வேதம் எப்படி ஜாதியை வலியுறுத்துகின்றதோ அதே போல் முஸ் லிம்களுடைய வேதம் ஜாதியை வ லியுறுத்தினால் ஜெபமணி விமர்சனம் செய்யலாம். இஸ்லாத்தின் வேதம் ஜாதியை வேரறுக்கும் போது அதை விமர்சிப்பதில் நியாயம் என்ன இருக்கிறது?

**விமர்சனம் 24**

உம்மிகள் சொன்ன யாவுமே சரியானவை அல்ல என்பதை என் கையிலுள்ள குர்ஆன் புத்தகத்தின் பக்கம் 13ல் இதன் ஆசிரியர் விவரித்துள்ளார். இங்கே 454 வசனங்கள் ஆயிஷாவின் வசனங்களுக்கு மாறுபாடாக உள்ளது. ஆயிஷா அவ்வசனங்களைத் திருத்தி சேர்த்ததாகவும் அறிவித்தது

என்று திருவாய் மலர்ந்துள்ளார் ஜெபமணி.

இவர் குறிப்பிட்ட புத்தகத்தில் என்ன உள்ளது என்பதைக் கூறும் முன் ஜெபமணியன் அறிவீனத்தைச் சுட்டிக் காட்டுவது அவசியமாகி விட்டது. முன்னர் கி பி எட்டாம் நூற்றாண்டிலேயே குர்ஆன் எழுதப்பட்டது என்று கூறியவர் இங்கே ஆயிஷா (ர லி) அவர்களின் காலத்திலேயே எழுதப்பட்டதாக ஒப்புக் கொள்கிறார். தான் என்ன சொல்கிறோம் என்று புரியாத மரமண்டையாருடன் தாம் நாம் மோத வேண்டிய நிலை.

அவர் குறிப்பிடுவது ஆ.கா.அப்துல் ஹமீது பாகவி அவர்கள் வெளியிட்ட நீண்ட முன்னுரையுடன் கூடிய பழைய தமிழ் தர்ஜீமாவைத் தான். அதில் கூறப்படுவது என்னவென்றால் திருக்குர்ஆனின் வசனங்கள் எத்தனை என்பதில் உள்ள கருத்து வேறுபாடு கூறப்படுகிறது.

ஆயிஷா (ர லி) அவர்களின் கருத்துப்படி குர்ஆன் வசனங்கள் 6666 மற்றும் சிலரது கருத்துப்படி 6212 என்று பட்டியல் போடப்படுகின்றது. 6212க்கும் 6666 க்கும் இடையே உள்ள வித்தியாசம் 454 ஆக இந்த 454 வசனங்கள் ஆயிஷாவால் சேர்க்கப்பட்டன எனத் தெளிவடைந்துள்ளார் ஜெபமணி.

இந்த விஷயத்தில் அவருக்கு அறியாமை இருப்பதை மன்னிக்கலாம். ஏனெனில் வேண்டுமென்று அவர் இவ்வாறு கூறவில்லை. அவர் புரிந்து கொண்ட லட்சனம் இவ்வளவு தான். அதன் விளக்கத்தை இனி காண்போம்.

திருக்குர்ஆனில் எந்த ஒரு வார்த்தையும் யாராலும் கூட்டப்படவுமில்லை. குறைக்கப்படவும் இல்லை. இன்று எதனைக் குர்ஆன் என்றுக் கூறுகிறோமோ அது தான் 14நூற்றாண்டுகளாகக் குர்ஆனாக இருக்கிறது.

அப்படியானால் எதற்காக எண்ணிக்கையில் கருத்து வேறுபாடு ஏற்பட வேண்டும். இதைத் திருக்குர்ஆன் முதல் அத்தியாயத்தைக் கூறி விளக்கலாம்.

அல்ஹம்து ல்லாஹி ரப்பில் ஆலமீன் என்பது ஒரு வசனம் அர்ரஹ்மானிற் ரஹீம் என்பது மற்றொரு வசனம். சில பேர் இவ்விரண்டும் ஒரு வசனம் என்பார்கள். அதாவது சிலருடைய கருத்துப்படி அவை இரண்டு வசனங்கள். வேறு சிலருடைய கருத்தின் படி இரண்டும் சேர்ந்து ஒரு வசனம்.

குர்ஆனுடைய வசனத்தின் முடிவு எங்கே? மறு வசனத்தின் ஆரம்பம் எங்கே? என்று எழுந்த கருத்து வேறுபாட்டினால் திருக்குர்ஆனின் வசன எண்கள் எத்தனை என்பதில் கருத்து வேறுபாடுகள் உள்ளன.

ஆனால் இரு வேறு எண்களைக் கூறுவோரின் கருத்துப்படியும் குர்ஆனில் கூடுதல் இல்லை. குறைவும் இல்லை. இதையும் ஜெபமணியால் புரிந்து கொள்ள முடியவில்லை.

**விமர்சனம் 25**

குர்ரான் 2:196 . 37:107 ஆகியவை ஆபிரஹாம் இஸ்மவேலைப் ப லியிட்டதாகக் கூறுகிறது என்கிறார் ஜெபமணியார்.

(பக்கம் 7)

மனிதப் பலியின் மீதே தன் மதத்தின் அஸ்திவாரம் அமைந்துள்ளதால் அவருடைய பார்வை இப்படிப் போகின்றது. ஆபிரகாம் இஸ்மவேலைப் ப லியிட முயன்றதும் அதன் பின் இறைவனின் கட்டளைப் பிரகாரம் இஸ்மவேலுக்குப் பதிலாக ஒரு ஆட்டைப் ப லியிட்டதும் தான் திருக்குர்ஆன் கூறக்கூடிய செய்தியாகும்.

**விமர்சனம் 26**

குர்ரான் 17:94 95 இறைவன் மனிதன் மத்தியில் மனிதாக வந்தார் என்கிறது எனக் கூறுகிறார் ஜெபமணி.

மனிதர்களிடம் நேரான வழி வந்த போது அல்லாஹ் ஒரு மனிதரையா தூதராக அனுப்பி வைத்தான் என்று கூறுவதைத் தவிர அவர்கள் விசுவாசம் கொள்வதைத் தடை செய்ய ஒன்றுமே இல்லை. (அதற்கு) நபியே நீர் கூறும் பூமியில் மனிதர்களே வசித்திருந்து அதில் சாவதானமாக நடந்து திரிந்து கொண்டிருந்தால் நாமும் வானத்திலி ருந்து ஒரு மலக்கையே (நம்முடைய) தூதர்களாக அவர்களிடம் அனுப்பியிருப்போம் (அல்குர்ஆன்17:94,95) இது தான் அவர் குறிப்பிட்ட வசனம். இதி லிருந்து இறைவனே மனிதனாக வந்தார் அவர் தான் ஏசு என்று ஞானம் பெறுகிறார் ஜெபமணி.

ஐயா ஜெபமணியாரே! தமிழில் உள்ள இந்த மொழி பெயர்ப்பு கூட உமக்கு புரியவில்லை என்றால் உம்மைப் பற்றி நாங்கள் என்ன முடிவுக்கு வருவது? இறைவன் மனிதராக வருவான் என்று இதில் கூறப்படவே இல்லையே! மனிதர்களுக்கு அனுப்பப்படும் இறைவனின் தூதர் (இறைவன் அல்ல ) மனிதனாகத் தான் இருக்க முடியும் என்று கூறுகிறது. இதன் மூலம் ஏசு மனிதனிடம் தூதராக வந்ததால் ஏசுவும் மனிதன் தான் தெய்வப் பிறவி அல்ல என்று தான் விளங்குகிறது

**விமர்சனம் 27**

குர்ரான் 5:112, 8:49 , 3:55 இயேசுவை சிருட்டிகனாக்குகின்றது என்கிறார் ஜெபமணி.

(பக்கம் 79)

ஈஸா (அலை) அவர்கள் ஒருசில பறவை வடிவங்களை உருவாக்கி அவற்றைப் பறவைகளாக ஆக்கியதாக அவ்வசனங்கள் கூறுவது உண்மையே. ஆனால் அகே வசனத்திலே என் அனுமதியுடன் அவ்வாறு செய்தீர் என்று இறைவன் கூறுவதாக இடம் பெற்றுள்ளதே உமது கண்களுக்குத் தென்படவில்லையா? இறைவன் நாடினால் அவன் நாடும் போது எவர் மூலமாகவும் அற்புதங்கள் நிகழலாம் என்று முஸ்லிம்களாகிய நாங்கள் நம்புகிறோம். அந்த வகையில் இறைவன் அனுமதித்த சில சமயங்களில் ஈஸா (அலை) அவர்களும் அற்புதங்கள் செய்ததை நம்புகிறோம். இதனால் அவர் சிருஷ்டிப்பவர் என்று ஆகிவிட முடியுமா?

அப்படியானால் மூஸா (அலை) அவர்கள் இறந்தவனை உயிர் பித்தததை குர்ஆன் 2:72 கூறுகிறதே அவரும் சிருட்டிப்பவரா? அவரும் தேவ மைந்தனா? இதை ஜெபணி ஏற்பாரா?

ஆபிராகம் பறவைகளை உயிர்ப்பித்ததாக 2:260 வசனங்கள் கூறுகிறதே? அவரும் கூட சிருட்டிப்பவர் தானா ? அவரும் கூட தேவ மைந்தன் தான் என்று ஜெபமணியார் ஒப்புக் கொள்வாரா?

பைபிளும் குர்ஆனும் மோசே கைத்தடியால் பாம்பை உருவாக்கியதாகக் கூறுகின்றனவே அவரும் கூட சிருட்டிகன் தானா?

**விமர்சனம் 28**

குர்ரான் 3;45. 4;71 இயேசு இறைவனின் வார்த்தையானவர் என்று கூறுவதாக ஜெபமணியார் கூறுகிறார்.

கலிமத்துல்லாஹ் இறைவனின் வாக்கு என்று குர்ஆன் ஈஸா (அலை) அவர்களைக் கூறுவது உண்மையே. இறைவனின் தனிப் பெரும் ஆற்றலால் இறைவனின் உத்தரவால் படைக்கப்பட்டதால் இறைவன் அவ்வாறு கூறுகிறான். இதனால் தேவ மைந்தன் ஆகி விட முடியுமா?

ஆகி விட முடியும் என்றால் 3:30 வசனத்தில் யஹ்யாவையும் இறைவன் க லிமதுல்லாஹ் என்று கூறுகிறான். அதற்கும் இது தான் பொருளா? யஹ்யாவும் ஏசுவும் சம நிலையில் உள்ளவர் என்பதை ஜெபமணியார் ஒப்புக் கொள்ளத் தயாரா?

**விமர்சனம் 29**

குர்ரான் 21:91 19:19 இயேசு இறைவனின் அருளானவர் என்று கூறுவதாக ஜெபமணி கூறுகிறார்.

(பக்கம் 79)

இறைவனின் உத்தரவுப் பிரகாரம் மர்யம் பிரசவித்ததையும் அவரையும் அவரது மனைவியையும் உலகுக்கு ஒரு அத்தாட்சியாக- அதாவது இறைவன் நினைத்தால் தந்தையின்றிக் கூடப் படைக்க முடியும் என்பதற்குச் சான்றாக ஆக்கினோம் என்று அவ்வசனங்கள் கூறுகின்றன. உலகுக்கே அருளானவர் என்று கூறவில்லை. அப்படி வேறு சிலரை குறித்து கூறி இருந்தாலும் அதற்கு இறைவன் என்பது அர்த்தமில்லை.

**விமர்சனம் 30**

குர்ரான் 3:45 இயேசு வானில் பூமியில் கெம்பீரமானவரும் இறைவனின் மிக நெருங்கியவருமாம் என்கிறார் ஜெபமணி

(பக்கம் 79)

இதை நாம் மறுக்கவில்லை. ஜபமணியே முன்பு குறிப்பிட்டப்படி ஆபிரகாமை கலீலுல்லாஹ் என்றும் மோஸையை கலீமுல்லாஹ் என்றும் கூறி அவர்களும் இறைவனுக்கு நெருக்கமானவர்களே என்கிறது. ஈஸா (அலை) ஒரு சிறந்த மனிதர் என்பதை எந்த முஸ்லிமும் மறுக்கவில்லையே. கடவுளின் குமாரர் என்று கூறுவதைத் தான் மறுக்கின்றனர்.

**விமர்சனம் 31**

3:55. 4:158. 19:15. 33 இயேசு மரித்து உயிர்த்து இறைவனால் உயர்த்தப்பட்டவர் என்கிறது என்கிறார் ஜெபமணி

(பக்கம் 79)

அவ்வசனங்களில் மரித்து உயிர்தெழுந்தார் என்று கூறப்படவில்லையே. அவரைக் கொல்லவுமில்லை சிலுவையில் அறையவுமில்லை. என்று தன்னளவில் இறைவன் உயர்த்திக் கொண்டான் என்று தானே அவ்வசனங்கள் கூறுகின்றன. சிலுவையில் அறையப்பட்டதையே மறுக்கும் இவ்வசனங்களை சிலுவைப் ப லிக்கு அதாரமாக்கும் பேதமையை என்னவென்பது.

**விமர்சனம் 32**

3:56 98:6 இயேசுவை நிராகரிப்போர் இம்மை மறுமையில் வாதிக்கப்படுவர் என்று கூறுவதாக ஜெபமணி கூறுகிறார்.

ஏசுவை எந்த முஸ்லிமும் நிராகரிக்கவில்லையே? எல்லா நபிமார்களையும் அவர்கள் நம்பத்தான் செய்கிறார்கள் . அவரைக் கடவுள் என்றோ கடவுளின் குமாரர் என்றோ கடவுளின் அம்சம் என்றோ கூறி இறைவனை நிராகரிப்பதைத் தானே முஸ்லி ம்கள் மறுக்கின்றனர்.

**விமர்சனம் 33**

7:157 , 3:164 இயேசு பாவ விலங்கை விலக்கியவர் என்று கூறுவதாக ஜெபமணி தெளிவடைந்துள்ளார் (பக்கம் 79)

3:164 வசனம் நபி (ஸல்) அவர்களையே கூறுகிறது என்பதை முன்னர் விளக்கினோம் 7:157 வசனம் சொல்வதென்ன என்பதை இனிமேல் காண்போம்.

மோசேவுக்கு அருளப்பட்ட தவ்ராத்திலும் ஏசுவுக்கு அருளப்பட்ட இஞ்சீலிலும் முஹம்மது (ஸல்) அவர்களின் வருகை பற்றிக் கூறப்பட்டதையும் அந்த முஹம்மது பாவ விலங்கை அகற்றுவார் எனவும் அவ்வசனம் கூறுகிறது.

ஏசுவுக்கு அருளப்பட்ட வேதத்திலேயே இனி வருபவர் என்று கூறப்பட்டால் அவர் ஏசுவாக எப்படி இருக்க முடியும்? ஏசு அல்லாத வேறொருவராகத் தானே இருக்க முடியும்.

**விமர்சனம் 34**

56:10 . 14 இயேசு இரகசியமாக வருகிறவர் என்று குர்ஆன் கூறுவதாக ஜெபமணி கதையளக்கிறார்.

அவ்வசனங்கள் உலக முடிவு நாள் பற்றியும் மலைகள் தூள் தூளாகப் பெயர்த்தெடுக்கப்படுவதையும். (வானத்துக்கல் உட்பட) கூறுகின்றன. இதில் என்னய்யா இரகசியம்?

**விமர்சனம் 35**

36:68 . 70 மறுபடியும் பிறவாவிட்டால் தேவனுடைய இராஜ்ஜியத்தில் பிரவேசியார் என்று இயேசு, யோவான் 3:3 . 5. 7 ல் சொல்லி யவற்றை விளக்குகிறது என்கிறார் ஜெபமணி.

அவ்வசனங்கள் உயிருள்ளவர்களுக்கு எச்சரிக்கைச் செய்வதாக குர்ஆன் அருளப்பட்டது எனவும், முஹமதுவுக்கு நாம் கவிதையைக் கற்றுத் தரவில்லை எனவும் கூறுகிறது.

கவிதையை அறியாத ஒருவர் அழகு நடையில் குர்ஆனை மக்கள் முன் வைத்தார் என்றால் அது இறை வேதம் என்பதற்கு தெளிவான சான்று என்று தான் அவ்வசனங்களிலிருந்து விளங்கலாம்.

**விமர்சனம் 36**

5:82-85 3:113. 114 199 ல் இயேசுவுக்குள்ளானோர் மாத்திரமே நித்தியத்தில் வாழ முடியும் என்கிறது எனக் கூறுகிறார் ஜெபமணி.

அவர் குறிப்பிட்ட 5:82 - 85 பல கிறித்தவர்கள் நபிகளின் காலத்தில் நபியிடம் வந்து அவருக்கு அருளப்பட்ட வேதத்தை கேட்டு கண் கலங்கி கிறித்தவத்தி லிருந்து விலகி இஸ்லாத்தில் இணைந்ததைக் கூறுகிறது.

ஜெபமணியும் அவ்வாறு செய்ய வேண்டும் என்று அழைப்பு விடுக்கும் இவ்வசனத்தைக் கூட அவரால் புரிந்து கொள்ள முடியவில்லை.

3:113 . 114 வசனங்களும் இதே கருத்தையே கூறுகின்றன.

3:199 வசனமும் அன்றைய கிறித்தவர்கள் முஹம்மதுவுக்கு அருளப்பட்ட வேதத்தை ஏற்று இஸ்லாத்தில் இணைவதன் மூலம் நித்திய வாழ்வை அடைந்ததாகக் கூறுகிறது.

ஜெபமணியின் விளங்கும் திறன் எத்தகையது என்பதற்கு இவையெல்லாம் தெளிவான சான்றுகள்.

**விமர்சனம் 37**

3:64 இயேசுவின் மத்தியஸ்தால் ஒன்றுபடவும் எனக் கூறுவதாகக் கூறுகிறார்.

3:64ல் மனிதர்களை அதாவது இயேசுவைக் கடவுளாக்குவதில்லை என்று கூறி இறைவனுக்கு இணை வைக்காதிருந்தால் நாம் ஒன்று படலாம் என்ற அழைப்பு விடப்படுகிறது.

இதையெல்லாம் படிக்கும் வாசகர்கள் இந்த டுயூப்லைட்டிற்கா பதில் சொல்ல வேண்டும் என்று எண்ணிவிடாதீர்கள் ஏனென்றால் டியூப்லேட்டாவது தாமதாமாகவாவது எரிந்து விடுமன்றோ.

**விமர்சனம் 38**

2:248 . 61:9 . 2:38. 129 .160 .40:53 .54 ஏசுவின் மார்க்கமே சகல மார்க்கத்தையும் வெல்லும் என்று கூறுவதாக உளறுகின்றார்.

2:248 வசனம் தாலூத் பற்றிக் கூறுகிறது.

61:9 நபி (ஸல்) அவர்களைக் குறிக்கிறது என்பதை முன்பே விளக்கியுள்ளோம்.

2:38 ஆதம் (அலை) அவர்களைக் குறிக்கிறது.

2:129 ஆபிரகாமும் இஸ்மாயீலும் தங்கள் சந்ததிகளிலி ருந்து ஒரு தூதரை அனுப்புமாறு இறைவனிடம் பிரார்த்தித்ததாக உள்ளது. இஸ்மவேல் பரம்பரையில் ஏசு வராததால் அது ஏசுவைக் குறிக்காது முஹம்மது (ஸல்) அவர்களையே குறிக்கிறது.

2:160 இறை வேதத்தை மறைக்கும் ஜெபமணி போன்றோரை அடையாளம் காட்டுகிறது.

40:53 . 54 வசனங்கள் இறை வேதத்தில் தக்க சான்று இன்றி ஜெபமணி போல் தர்க்கம் என்று உளறிக் கொட்டக் கூடாது எனக் கூறுகிறது.

அவர் குறிப்பிட்ட ஒரு வசனமும் ஏசுவைக் குறிக்கவில்லை.

ஆதியாகமம் 18:10 எண்ணாகமம் 24:5 மாற்கு 36:7 மத்தேயு 63:1 லூக்கா 7:12ஆகிய வசனங்கள் 1989ல் தமிழ் நாட்டில் தோன்றக்கூடிய ஜெபமணி எனும் மூடரைப் பற்றிக் கூறுகிறது என்று நாம் எழுதுவதற்கும் ஜெபமணி எழுதியுள்ளதற்கும் எந்த வித்தியாசமும் இல்லை.

**விமர்சனம் 39**

61:6 இயேசு கூறிய தேற்றரவாளனாகிய தூய ஆவியானவரைக் கூறுவதாகக் ஜெபமணி கண்டுபிடித்துள்ளார்.

61:6 முன்பே விளக்கப்பட்டுவிட்டது.

**விமர்சனம் 40**

43:45 5:92 8:1 இயேசு வணங்கப்படத் தக்கவர் என்று கூறுவதாக ஜெபமணி உளறுகிறார்.

43:35 இவ்வுலகில் நிலையாமை பற்றியும் மறுமையின் சிறப்புப் பற்றியும்

5:92 நபிகளின் கட்டளைக்குக் கட்டுப்பட வேண்டும் என்பது பற்றியும்

8:1 போர்ப் பொருட்கள் பங்கிடுவது பற்றியும் கூறுகிறது

எடுத்துக்காட்டும் எண்களுக்கும் இந்த மண்ணாங்கட்டி எடுத்துவைக்கும் கருத்துக்கும் ஏதாவது சம்பந்தமிருக்கிறதா?

இப்படி குர்ஆன் என்று போட்டு பல நம்பர்களை விட்டு அடிக்கும் இந்தச் சாமியார் வேலையை உமது ஆலயங்களோடு நிறுத்திக் கொள்வீராக என்று ஜெபணிக்கு கூறி ஆசீர்வதிக்கிறோம்.

**விமர்சனம் 41**

ஈஸா அலைஹிவஸல்லம் என்ற சொல்லிலிருந்தே இஸ்லாம் என்பது பிறந்தது என்கிறார் ஜெபமணி.

ஜெகன் மேரி என்பதிலிருந்து தான் ஜெபமணி பிறந்தது என்றும், பார்த்து திருடுபவர் என்பது தான் பாதிரியார் என்று திரிந்தது என்றும், முருகவேல் என்பதே சாமுவேலானது என்றும் கூறுவது எவ்வளவு முட்டாள்தனமானதோ அதே அளவு முட்டாள்தனமானது ஜெபமணியின் இந்த அரிய கண்டுபிடிப்பு.

இறுதி விமர்சனம்

தனது நூல் நெடுகிலும் இயேசு பற்றி பைபிள் கூறும் வசனங்களை அள்ளித் தெளித்து அவரைக் கடவுளாக்க முயன்றுள்ளார். பைபிளை வேதமென நம்பியவர்கள் தான் இதில் ஏமாற முடியுமே தவிர முஸ்லிம்கள் அல்ல.

ஆனால் அவர் அள்ளித் தெளித்தது பைபிள் வசனங்கள் என்பதால் பைபிள் வசனங்கள் கொண்டே அவர் எடுத்துக் காட்டும் பைபிள் வசனங்களை மறுப்போம்.

1) அப்போது யோவானால் ஞானஸ்நானம் பெறுவதற்கு ஏசு க யாலை விட்டு யோர்தானுக்கு அருகே அவனிடத்தில் வந்தார்.

(மத்தேயு 3:13)

இன்னொருவரால் ஞானஸ்நானம் பெற்றவர் தான் தேவ மகனாகப் பிறந்தாராம். அந்தோ பரிதாபம்

2) அப்பொழுது ஏசு அப்பாலே போ சாத்தானே! உன் தேவனாகிய கர்த்தரை பணிந்து கொண்டு அவர் ஒருவருக்கே ஆராதனை செய்வீராக என்று எழுதியிருக்கிறதே என்றார்

(மத்தேயு 4:10)

இறைவனை மட்டுமே ஆராதிக்க வேண்டும் இயேசுவை ஆராதிப்பவர் ஜெபமணி உட்பட சாத்தான் என்கிறார் இயேசு.

3) சமாதானம் பண்ணுகிறவர்கள் பாக்கியவான். அவர்கள் தேவனுடைய புத்திரர்கள் என்று என்னப்படுவார்கள் என்றார் இயேசு

(மத்தேயு 5:9)

தேவனுடைய புத்திரர் என்ற பதம் அன்றைய வழக்கில் தேவனுடைய அடிமைகள் என்ற பொருளிலேயே பயன்படுத்தப்பட்டது என்பதற்கு இது சான்று. இயேசு மாத்திரம் தேவனின் புத்திரர் அல்ல. சமாதானம் பண்ணும் அனைவரும் தேவனின் புத்திரர்களே என்று இயேசுவே கூறுகிறார்.

இப்படிச் செய்வதனால் நீங்கள் பரலோகத்தில் இருக்கிற உங்கள் பிதாவுக்கு புத்திராய் இருப்பீர்கள் என்றார் இயேசு..

4) அன்றியும் நீ ஜெபம் பண்ணும் போது மாயக்காரரைப் போல் இருக்க வேண்டாம். மனுஷர் காணும் படியாக அவர்கள் ஜெப ஆலயங்களிலும் வீதகளின் சந்திகளில் நின்று ஜெபம் பண்ண விரும்புகிறார்கள்.

மத்தேயு 6:5

ஜெபமணி போன்ற பாதிரிமார்களுக்கு சொல்லப்பட்ட இந்த போதனையை அலட்சியம் செய்வதேன்?

5) அவர்களைப் போல் நீங்கள் செய்யாதிருங்கள் உங்கள் பிதாவை நோக்கி நீங்கள் வேண்டிக் கொள்வதற்கு முன்னமே உங்களுக்கு இன்னது தேவை என்று அறிந்திருக்கிறார்.

மத்தேயு 6:8

பிதாவிடம் அதாவது கர்த்தராகிய கடவுளிடமே பிரார்த்திக்க வேண்டும் என்று ஏசு கூறியுள்ளார். தன்னிடம் பிரார்த்திக்க அல்ல.

6) இரண்டு எஜமான்களுக்கு ஊழியஞ் செய்ய ஒருவனாலும் கூடாது என்றார் ஏசு

மத்தேயு 6:24

ஜெபமணி போன்றோர் மூன்று எஜமான்களுக்கு ஊழியஞ் செய்ய புறப்பட்டதேன்?

7) ஆகையால் பொல்லாதவர்களாகிய நீங்கள் பிள்ளைகளுக்கு நல்ல ஈவுகளை அறிந்திருக்கும் போது பரலோகத்தி ருக்கிற உங்கள் பிதா தம்மிடத்தில் வேண்டிக் கொள்கிறவர்களுக்கு நன்மையானவைகளைக் கொடுப்பது அதிக நிச்சயம் அல்லவா?

மத்தேயு 7:11

இறைவனிடம் மட்டும் பிரார்த்தனை செய்ய வேண்டும் என்கிறார் ஏசு.

8) பரலோகத்தி லிருக்கிற என் பிதாவின் சித்தாந்தத்தின் படி செய்கிறவனே பரலோக இராஜ்ஜியத்தில் பிரவேசிப்பானேயல்லாமல் என்னை நோக்கி கர்த்தாவே கர்த்தாவே என்று சொல்கிறவன் அதில் பிரவேசிப்பதில்லை. அந்நாளில் அநேகர் என்னை நோக்கி கர்த்தாவே கர்த்தாவே உமது நாமத்தினாலே தீர்க்கதரிசனம் உரைத்தோம் அல்லவா? உமது நாமத்தினாலே தீர்க்கதரிசினம் உரைத்தோம் அல்லவா?உமது நாமத்தினாலே பிசாசுகளைத் துரத்தினோம் அல்லவா? உமது நாமத்தினாலே அனேக அற்புதங்களைச் செய்தோம் அல்லவா? என்பார்கள். அப்போது நான் ஒருக்காலும் உங்களை அறியவில்லை அக்கிரமச் செயகக்காரர்களே என்னை விட்டு அகன்று போங்கள் என்று அவர்களுக்குச் சொல்வேன்

மத்தேயு 7:21.22. 23

ஏசு தேவ குமாரன் அல்ல என்பதற்கும் ஏசுவைக் கர்த்தனாக்கும் ஜெபமணி போன்றோர் அந்நாளில் ஏசுவால் கைவிடப்படுவார்கள் என்பதற்கும், இவர்களெல்லாம் அக்கிரமக்காரர்கள் என்பதற்கும் இதை விட வேறு அத்தாட்சி வேண்டுமா?

ஜெபமணியாரே அந்நாள் பற்றிய நம்பிக்கையும் தேவனைப் பற்றிய பயமும் உமக்கு இருந்தால் ஏசுவின் இந்தப் போதனையை இன்றளவும் நடைமுறைப்படுத்தும் இஸ்லாத்தின் பால் திரும்புவீரா?

1) மனிதருடைய கற்பனைகளை உபதேஷங்களாகப் போதித்து வீணாய எனக்கு ஆராதனை செய்கிறார்கள் என்று ஏசாயா தீர்க்கத்தரிசி நன்றாய் சொல்லியிருக்கிறான் என்றார்.

மத்தேயு 15:9

மனிதர்களின் கற்பனைகளைக் கலந்து வைத்துக் கொண்டு தான் ஏசுவைத் தேவகுமாரன் என்கிறார்கள் என்பதற்கு இது சான்றாக உள்ளது.

2) அதற்கு அவர் (ஏசு) நீ என்னை நல்லவன் என்று சொல்வானேன்?தேவன் ஒருவன் தவிர நல்லவன் ஒருவனுமில்லையே என்றார்

மத்தேயு 19:17

தன்னை நல்லவன் என்று கூறுவதற்கே சம்மதிக்காமல் அது கடவுளின் தனித்தன்னை என்று கூறியவரையா ஜெபமணியாரே தேவ குமாரன் என்று கூறிகிறீர்கள்.

11) அவருடைய சீஷர்கள் அதைக் கேட்டு மிகவும் ஆச்சரியப்பட்டு அப்படியானால் யார் இரட்சிக்கப்படக் கூடும் என்றார்கள். இயேசு அவர்களைப் பார்த்து மனுஷரால் இது கூடாதது தான் தேவனாலேயே எல்லாம் கூடும் என்றார்கள்.

மத்தேயு 19:25. 26

இரட்சகன் இறைவன் மட்டுமே நான் அல்ல என்று இவ்வளவு தெளிவாக அறிவித்த பின்னரும் ஏசுவை இரட்சகர் என்று ஜெபமணியாரே கூறத் துணியலாகுமா?

12) ஆனாலும் என் வலது பாரிசத்திலும் என் இடது பாரிசத்திலும் உட்கார்ந்திருக்கும் படி என் பிதாவினால் எவர்களுக்கு ஆயத்தம் பண்ணப்பட்டிருக்கிறதோ

அவர்களுக்கேயல்லாமல் மற்றொருவருக்கும் அதை அருளுவது என் காரியமல்ல என்றார்.

மத்தேயு 20:23

மறுமையில் இரட்சிப்பது இறைவனின் தனி உரிமை. தனக்கு அதில் எந்தப் பங்கும் இல்லை என்று ஏசு பிரகடனம் செய்த பின்பும் ஏசு இரட்சிப்பார் என்று கூற முடியுமா?

இந்தக் கருத்தில் அனேக வசனங்கள் பைபிளில் காணப்படுகின்றன. மனிதக் கரங்களால் மாசு படுத்தப்படாமல் இன்றளவும் பைபிளில் எஞ்சி நிற்கின்ற உண்மையான ஏசுவின் போதனைகள் இவை.

ஜெபமணி எடுத்துக்காட்டும் பைபிள் வசனங்களின் கருத்துகளை இவ்வசனங்கள் அடியோடு மறுக்கின்றன. இரண்டும் நிச்சயம் உண்மையாக இருக்க முடியாது. இரண்டில் ஒன்று தான் உண்மையாக இருக்க முடியும். எதை உண்மை என்று ஏற்றாலும் பைபிளில் கலப்படம் உள்ளது என்று நிரூபணமாகும்.

எனவே ஜெபமணி தன் தவறான கிறித்தவக் கோட்பாட்டை விட்டு விலகி கலப்படமற்ற தூய வேதத்தைப் பெற்ற ஒரே இறைவனை மாத்திரமே வணங்கச் சொல்கின்ற தூய இஸ்லாத்தை தெரிந்தெடுக்குமாறு பரிந்துறை செய்கிறோம்.

முடிவுரை

ஜெபமணியின் அவதூறு நூலுக்கு நம்மால் இயன்றவரை நாகரீகமாகவும் விளக்கமாகவும் பதிலளித்துள்ளோம். அவரது நடைக்கும் தரத்துக்கும் நாமும் இறங்குவதற்கு நமது மார்க்கமான இஸ்லாம் அனுமதிக்கவில்லை.

சில அன்பர்கள் இப்பிரசுரத்தை இலவசமாக வெளியிடுவதற்குரிய செலவை ஏற்றுள்ளனர். அவர்கள் ஏற்ற போது இருந்ததை விட பன் மடங்கு காகிதத்தின் விலை ஏறிவிட்டதால் சுருக்கமான முறையிலே மறுப்பளித்துள்ளோம். ஜெபமணியின் எதிர் விளைவைப் பொறுத்து தேவைப்பட்டால் மிக விரிவாக

மற்றொரு நூல் இன்ஷா அல்லாஹ் வெளிவரும் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறோம். வஆகிரு தஃவானா அனில் ஹம்துலில்லாஹி ரப்பில் ஆலமின்.